Regd No TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone, 420212 8 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55



உறுதி

நியாயத்தை ஏற்போம். இடுக்கண் களை துடைப்போம் நீதியை நிலை நாட்டு வோம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

சமுதாய நலன்

திராவிட சமுதாய நலனையே என் சொந்த நலனாக எண்ணி இருக் கிறேன்.

-தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 18 - 5 - 1984 வெள்ளி வெளியீடு 19 . 5 - 1984 சனி இதழ்: 211

# புயல் வேக பிரச்சாரம் மாலை 4 மணியுடன் முடிந்தது

## கருணாநிதியின் பொய்ப்பிரச்சாரம் திமுகவினரின் வன்முறை

## வெறியாட்டங்களுக்கு முடிவுகட்டும் வகையில் 4 தொகுதிகளிலும்

# மக்களின் ஆதரவு புரட்சித்தலைவருக்கே

## தி. மு. க.வுக்கு மீண்டும் பாடம் புகட்ட தமிழ் மக்கள் உறுதி

சென்னை. மே 18- கருணாநிதியின் பொய் பிரச்சாரத்திற்கும்,தி.மு.க.வினரின்வன்முறை வெறியாட்டங்களுக்கும் முடிவுகட்டும் வகையில் 4 சட்டமன்ற தொகுதிகளிலும் முதல்வர் புரட்சித்தலைவருக்கே எங்கள் ஆதரவு என்று மக்கள் வெளிப்படுத்தி உள்ளனர். அண்ணாநகர், மயிலாடுதுறை. தஞ்சாவூர் உப்பிலியாபுரம் ஆகிய 4 தொகுதிகளிலும் இன்று மாலை 4 மணியோடு பிரச்சாரம் ஓய்ந்தது.

அண்ணாநகர், உப்பிலியாபுரம், தஞ்சை, மயிலாடுதுறை ஆகிய 4 சட்டமன்ற தொகுதிகளிலும் இடைத் தேர்தலை ஒட்டி 20ம் தேதி வாக்குப்பதிவு நடைபெறுகிறது

இதை ஒட்டி இம்மாதம் முதல் தேதியில் இருந்து தேர்தல் பிரசாரம் தீவிரமாக இருந்தது

அதிலும் கடந்த ஒரு வாரகாலமாக அனல் தெறிக்கும் பிரச்சாரம் நடைபெற்றது. இதன் உச்சகட்டமாக நேற்று முதல் கடுமையாக இருந்தது.

அண்ணா நகர் தொகுதியில் நேற்று மாலை வீதி வீதியாகச் சென்று வாக்காளர்களை முதல்வர் புரட்சித் தலைவர் நேரில் சந்தித்தார்.

நேற்று நள்ளிரவுவரை ஆயிரம் ஆயிரம் வாக்காளரை சந்தித்தபுரட்சித் தலைவர் இன்று காலை பிரச்சாரத்தை தொடர்ந்தார்.

கடும் வெயிலையும் பொருட்படுத்தாமல் புரட்சித்தலைவர் சென்ற இடமெல்லாம் மக்கள் பெருந்திரளாகக் கூடி வரவேற்றனர்.

தாய்க் குலத்தினர் ஆரத்தி எடுத்து வரவேற்றனர் மக்கள் மகிழ்ச்சி ஆரவாரத்திற் கிடையே முதல்வர்புரட்சித்தலைவர் தமது இருவிரலைக்காட்டி இரட்டை இலைக்கு வாக்களிக்க வேண்டு கோள் விடுத்தார்,

கூடி இருந்த மக்களும் தங்கள் இரு விரல்களைக் காட்டி எங்கள் வாக்கு இரட்டை இலைக்கே என்று உறுதி கூறினர்.

### கருணாநிதிக்கு பதிலடி

அண்ணாநகர் தொகுதி மக்களுக்கு கருணாநிதி செய்த துரோகத்தை புரட்சித் தலைவர் பல இடங்களில் மக்களிடம் சித்தரித்தார்.

கருணாநிதியின் புளுகு பிரச்சாரத்திற்கும் முதல்வர் பதிலடிகொடுக்கும் வகையில் உரையாற்றினார்.

மக்கள் நல்வாழ்வே தன் லட்சியமாகக் கொண்டு செயல்பட்டு வரும் புரட்சித்தலைவர் ஆட்சிக்கு எங்கள் ஆதரவு என்று மக்கள் தங்கள உறுதியை வெளிக்காட்டினர்.

வன்முறைக்குத் திட்டமிட்டு வரும் திமுகவினர் புரட்சித் தலைவருக்கு வந்து

(7ம் பக்கம் பார்க்க)



---

தோல்வி ஜுரம்

### முதல்வர் மீது சோடாபுட்டி வீசி தாக்க திமுக முயற்சி

சென்னை, மே. 18- அண்ணாநகர் தொகுதியில் கழகத்துக்கு மக்கள் ஆதரவு பெருகி வருவது கண்டு ஆத்திரமடைந்துள்ளார்.

திமுகவினர் முதல்வர் புரட்சித்தலைவர் மீது சோடாபாட்டிலை வீசினர். நல்லவேளையாக அந்த சோடாபாட்டில் புரட்சித்தலைவர் சென்ற வேன்மீது பட்டு உடைந்தது.

சென்னை அண்ணா நகர் தொகுதியில் கொளுத்தும் வெய்யிலையும் பொருட் படுத்தாமல் மின்னல் வேகத் தேர்தல் பிரசாரம் செய்த முதல்வர் புரட்சித் தலைவர் வேன் மீது தி.மு.க குண்டர்கள் சோடா பாட்டில் வீசினர்.

அண்ணா நகரில் சிந்தாமணி மார்க்கெட் அருகே புரட்சித்தலைவர் சென்றபோது சில திமுகவினர் கூடியிருந்து புரட்சித் தலைவரை நோக்கி சோடாபாட்டில் வீசினர்.

ஆனால் குண்டர்கள் வீசிய சோடாபாட்டில் புரட்சித் தலைவரின்வேன் மீது விழுந்தது.

ஆனால் புரட்சித் தலைவர் எதையும் பொருட்படுத்தாமல் தொடர்ந்து தேர்தல் பிரச்சாரம் செய்தார்.

டி. பி. சத்திரத்தில் தேர்தல் பிரச்சாரத்தை முடித்துக் கொண்டு ஐ சி. எப். காலனிக்கு புரட்சித் தலைவர் சென்றார்.

பகல் சுமார்ஒரு மணிக்கு புரட்சித்தலைவர் சிந்தாமணி மாாக்கெட் வழியாக சென்றபோது திமுக குண்டர்கள் இந்த தாக்குதலை நடத்தினர்.

---

### செல்வி ஜெயலலிதா எம்.பி. பேச்சு

6-ம் பக்கம்

---

## உப்பிலியாபுரம் தொகுதியில் செல்வி ஜெயலலிதா எம். பி. நடத்தியசூறாவளிசுற்றுப்பயணம்

உப்பிலியாபுரம், மே 18- உப்பிலியாபுரம் தொகுதியில் கழக வேட்பாளர் சரோஜாவை ஆதரித்து கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா எம் பி. கடந்த 3 நாட்களில் 36 மணி நேரம் தொடர்ந்து சூறாவளி சுற்றுப்பயணம் செய்து தேர்தல் பிரச்சாரம் செய்தார.

ஒவ்வொரு நாளும் மாலையில் துவங்கிய அவருடைய தேர்தல் பிரச்சாரம் விடிய விடிய நடைபெற்றது கடந்த 3 நாட்களில் 2; லட்சம் மக்களை நேரில் சந்தித்து அவர் வாக்கு கேட்டார். செல்வி ஜெயலலிதா எம். பி. சென்ற இடங்களில் எல்லாம் மக்கள் வெள்ளம்போல் திரண்டு வந்திருந்தனர்.

மலைவாழ் மக்கள், ஆதிதிரவிடர்கள் ஆகியோர் வாழும் பகுதிக்கு செல்வி ஜெயலலிதா எம்,பி. சென்று தேர்தல் பிரச்சாரம் செய்தார். அங்கு மலைஜாதி பெண்களும் ஆதிதிராவிடர் பெண்களும் செல்வி ஜெயலலிதா எம். பி.க்கு ஆரத்தி எடுத்து வெற்றித்திலகமிட்டனர். உப்பிலியாபுரத்திலுள்ள அனைத்து கிராமங்களுக்கு செல்வி ஜெயலலிதா எம். பி சென்று ஓட்டு கேட்டார். அவருக்கு சென்ற இடத்தில் எல்லாம சிறப்பான வரவேற்பு அளிக்கப்பட்டது எல்லா இடங்களிலும ஆண்களும் பெண்களும் கூடியிருந்து செல்வி ஜெயலலிதா எம் பி.யை வரவேற்றனர்.

---

## கருணாநிதியின் வன்முறை சதி

## ஈ. பி. ராயப்பா திடுக்கிடும் தகவல்

அண்ணாநகர் தொகுதியில் தோல்வி உறுதி என்று தெரிந்து கொண்ட திமுகவினர் தொகுதி முழுவதும் வன்முறைச் செயல்களில் ஈடுபட்டுள்ளனர்.

வன்முறை செயல்கள் மூலம் வாக்காளர்களை அச்சுறுத்தினால் அவர்கள் வாக்குச்சாவடிக்கு செல்ல மாட்டார்கள். அவர்களுக்குப் பதில் கள்ள ஓட்டு போட்டுவிடலாம் என திமுகவினர் திட்டம் போட்டுள்ளனர்.

உண்மை இப்படி இருக்க கருணாநிதியின் குடும்ப ஏடும் அவரது எடுபிடி ஏடுகளும் உண்மைக்கு மாறாக செய்திகளை வெளியிட்டு வருகின்றன. கருணாநிதியின் எடுபிடி ஏடான எதிரொலி ஸ்ரீபால் பார்வைக்கு என ஒரு செய்தியை வெளியிட்டுள்ளது,

சென்னை நகர போலீஸ் கமிஷனருக்கே கருணாநிதியின் எடுபிடி ஏடு எச்சரிக்கை விட்டு மிரட்டியுள்ளது,

இந்த மிரட்டல்குறித்து கருணாநிதி முதலமைச்சராக இருந்தபோது தமிழக அரசின் தலைமைச் செயலாளராக பணியாற்றிய ஈ. பி. ராயப்பா தெரிவித்திருப்பதாவது:

வன்முறை சம்பவங்களைத் தடுப்பது - சட்ட ஒழுங்கு (Lawand order) பிரச்சினைகளை மேற்பார்வையிடுவது அரசின் தலைமைச் செயலாளர் மற்றும அவரின்கீழ்பணிபுரியும் ஐ.ஜ.பி.யின் கடமையாகும்.

கருணாநிதி ஆட்சிப் பொறுப்பில் இருந்த போது நடந்த மறக்க முடியாத சம்பவம் ஒன்றை தெரிவிக்கவிரும்புகிறேன்.

**1971-ம் ஆண்டு நடந்த தேர்தல் சமயம். பிப்ரவரி 28-ந் தேதி 1500 தி. மு. க. குண்டர்கள், மதுரையில் இருந்து சென்னைக்கு இறக்குமதி செய்யப்பட்டனர்.**

ஆனால் கருணாநிதி விரும்பியவாறு வன்முறை செயல்கள் நடக்காமல்தடுக்க பட்டது.

தலைமைச்செயலாளர் மற்றும் ஐ ஜி யின் கண்டிப்பான உத்தரவின் பேரில் கருணாநிதியின் திட்டம் தடுக்கப் பட்டது

**இதன் விளைவாய் பலவித இடையூறுகளை சந்திக்க நேர்ந்தது.**

ஆத்திரமடைந்த கருணாநிதி பழிவாங்கும் நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

**அந்த ஐ. ஜி. பி. எந்த சூழ்நிலையில் இறந்தார் என்பது அப்போது இருந்த சிலமுக்கிய அதிகாரிகளுக்கு தெரியும்.**

பதவியில் இருந்த போது தவறு புரிந்தவர்கள் இப்போது கூப்பாடு போடுவது பரிதாபத்திற்கு உரியது ஆகும்.

அரசியல்வாதிகள் வன்முறையை தூண்டிவிடாமல்இருப்பதோடு, போலீசார் தங்கள்கடமைகளை உரிய வகையில் நிறை வேற்றவும அனுமதிக்க வேண்டும்

இவ்வாறு ராயப்பா தெரிவித்துள்ளார்.

சென்னை அண்ணாநகர் தொகுதியில் முதல்வர் புரட்சித்தலைவரை மகளிர் ஆரத்தி எடுத்து வரவேற்றனர்.

# குழப்பம் ஏற்படுத்த திட்டமிட்ட கருணாநிதிக்கு மக்கள் பதிலடி

சென்னை, மே 18 அண்ணாநகர் தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் பி. எல். ராதாகிருஷ்ணனுக்கு ஆதரவாக முதல்வர் புரட்சித்தலைவர் வாக்கு கள் சேகரிக்க வருகிறார். அவரை நேரில் சந்தித்து பி. எல். ராதாகிருஷ்ணனை வெற்றி பெறச செய்வோம் என்று கூறுவதற்காக திரளான மக்கள் காலையிலிருந்து 80 வது வட்டம் பஜனைக்கோவில் தெரு சந்திப்பில் கொளுத்தும் வெய்யிலையும் பொருட்படுத்தாமல் காத்து இருந்தனர்.

தாய்மார்கள் கையில் குழந்தைகளுடன் வந்து காத்திருந்தனர்

பலவேறு இடங்களில் ஓட்டு சேகரித்து விட்டு முதல்வர் புரட்சித்தலைவர் சரியாக 2 மணிக்கு அங்கு வந்தார்

அவரைப் பார்த்ததும் 'சத்துணவு தந்த சரித்திர நாயகன் வாழ்க! இரட்டை இலைக்கே எங்கள் ஓட்டு! கழக வேட்பாளர் பி.எல். ராதாகிருஷ்ணனை வெற்றிபெறச்செய்வோம் என்று விண்ணதிர மக்கள் முழக்கமிட்டனர்

இரண்டு விரல்களை உயர்த்திக் காட்டி இரட்டை இலைக்கே வாக்களிக்க வேண்டும் என்று மக்களை முதல்வர் புரட்சித் தலைவர் கேட்டுக் கொண்டார்.

முன்னதாக காலை 10 மணியளவில் தி.மு.க தலைவர் கருணாநிதி பஜனை கோவில் தெரு சந்திப்பிற்கு திடீரென்று வந்தார்

அவருடைய சுற்றுப் பயணதிட்டத்தில் இது இடம் பெற்றிருக்க வில்லை, சூளைமேடு நெடுஞ்சாலை காந்தி சிலையிலிருந்து வேறு பாதை வழியாக தான் அவர் பிரசாரம் [illegible] பட்டிருந்தது என்றும் திடீரென்று குழப்பம் ஏற்படுத்த அவர் திட்டமிட்டு, புரட்சித்தலைவர் வரும் பாதையில் வந்தாரோ என்று காத்திருந்த மக்கள் பேசிக்கொண்டனர்

அப்படி அவர் எண்ணி வந்திருந்தால் அவருடைய எண்ணம் தவிடு பொடியாகும்படி கழகத் தோழர்களும் பொது மக்களும் அமைதியாகவும் கட்டுக் கோப்பாகவும் இருக்கும்படி 80 வதுவட்ட தேர்தல் பணி பொறுப்பாளரும் [illegible] உறுப்பினருமான [illegible] செய்த முயற்சி வெற்றி பெற்றது

இவ்வாறு கழகத் தோழர்களும் பொது மக்களும் அமைதியை கடைப்பிடித்ததைப் பார்த்த கருணாநிதியும் அவரது எடுபிடி ஆற்காடு வீராசாமியும் வாட்டமடைந்தனர்.

## இலங்கை அரசால்

# விரட்டப்பட்ட தமிழர்க்கு உதவுவதில் தவறு என்ன உள்ளது?

## ஜெயவர்த்தனேக்கு முதல்வர்புரட்சித்தலைவர் பதில்

**சென்னை, மே 18- இலங்கை அரசால் விரட்டப்பட்ட தமிழர்களை விருந்தினராக உபசரிக்கிறோம் இங்கு புலிகள் இல்லை மனிதர்கள்தான் இருக்கிறார்கள் என்று இலங்கை அதிபர் ஜெயவர்த்தனேக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பதிலளித்தார்**

சென்னை அண்ணா நகர் தொகுதியில் ஜெயலட்சுமிபுரம் வில்லேஜ் ரோடு ஸ்டர்லிங் ரோடு. ஆரிங்டன் ரோடு அப்பாசாமி முதலி தெரு மெக்னிகல்ஸ் ரோடு, பெரியார் சாலை. பிளவர்ஸ் ரோடு, டாக்டர் அழகப்ப செட்டி ரோடு, வெள்ளாளத் தெரு, சரவண பெருமாள் தெரு. கங்காதீஸ்வரர் கோயில் தெரு, செம்மன் பேட்டை, டெய்லர்ஸ்ரோடு, பெருமாள் கோவில்தோட்டம், டி.பி. சத்திரம், மார்க்கெட் கஜபதிநாயுடு தெருஆகிய இடங்களில் முதல்வர் புரட்சித்தலைவர் தேர்தல் பிரச்சாரம்செய்தார்.

ஜெயலட்சுமி புரத்தில் மலாமாரிபெய்துமுதல்வர் புரட்சித் தலைவரை மக்கள் வரவேற்றனர்.

நுங்கம்பாக்கம்வில்லேஜ் ரோடில்முதல்வர் புரட்சித் தலைவர் திறந்த வேனில் நின்று கொண்டு பேசுகையில் கூறியதாவது:-

ஜெயவர்த்தனேவுக்கு கூறிக் கொள்கிறேன். இலங்கையைச் சேர்ந்தவர்கள் இங்கே இருப்பவர்களை ஒப்படைக்க வேண்டும் என்று கூறியிருக்கிறார்கள் சர்வதேச சட்ட விதி என்கிறார்கள்.

இங்கே புலிகள் இல்லை மனிதர்கள் தான் இருக்கிறார்கள்.

உங்களால் விரட்டியடிக்கப்பட்டவர்கள் இங்கே வந்திருக்கிறார்கள் அவர்களை விருந்தினராக உபசரிக்கிறோம்.

அனைத்திந்திய அண்ணா திமு கழகம் அவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்யும்.

நியாயமாக அவர்களுக்கு ஏதாவதுவழி செய்துவிட்டால்பாராட்டும் இருக்காது

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

நேரு பூங்கா அருகே உள்ள குடிசைமாற்று வாரிய வீட்டின அருகே முதல்வர் புரட்சித்தலைவர் பேசும்போது 4 வது மாடியிலிருந்து தி.மு.க. வினர் கூச்சல் போட்டார்கள்.

உடனே புரட்சித் தலைவர், 'தைரியமிருந்தால கீழேவந்து கேளுங்கள். பழைய ராமச்சந்திரன் செத்து விடவில்லை' என்று கூறினார்.

அங்கு கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களும் கைதட்டி ஆரவாரம் செய்து இரட்டை இலைசின்னத்தை காட்டினார்கள்.

## மயிலாடுதுறையில்

# தி. மு. க.வினர் தயாரித்த போலி அறிக்கை அம்பலம்

**மயிலாடுதுறை, மே 18- திமுகவினர் போலி அறிக்கை தயாரித்து வெளியிட்டு இருந்தது இப்போது அம்பலமாகி உள்ளது.**

அம்பேத்கார் இயக்கம் என்ற பெயரில் பலரது பெயர்களைப் போட்டு போலி அறிக்கையை திமுகவினர் தயாரித்து இருந்தனர்.

மயிலாடுதுறையில் மன்னம்பந்தல் என்ற கிராமம் உள்ளது

அந்த ஊரில் அம்பேத்கார் இயக்கம் என்ற பெயரில் சிலரது பெயர்களைப் போட்டு திமுகவுக்கு எங்கள் ஆதரவு என்று அறிக்கை தயாரித்து வெளியிட்டு இருந்தனர்.

### மோசடி அறிக்கை

அந்த ஊருக்கு கழக எம். எல் ஏ. மாரிமுத்து சென்றுவாக்கு சேகரித்தபோது இந்த போலி அறிக்கை விவரம் வெளிவந்தது.

திமுகவினர் வெளியிட்டு இருந்த அறிக்கையில் கையெழுத்திட்டதாக சொல்லப்பட்டவர்கள் தாங்கள் அப்படி எதுவும் அறிக்கை விடவில்லை தி.மு.க வை ஆதரிக்க வில்லை என்று கூறினர்.

மாரிமுத்துவுடன் அவர்கள் கழகத்திற்கு ஆதரவாக பிரச்சாரம் செய்தனர் வாக்கு சேகரித்தனர்.



அரங்கநாயகம் பேட்டி

# திக. வினர் இனவெறி: தி. மு. க. தோல்வி உறுதி

மயிலாடுதுறை, மே. 18- மயிலாடுதுறையில் அமைச்சர் அரங்கநாயகம் நிருபர்களிடம் கூறியதாவது:-

முதல்வர் புரட்சித்தலைவர் இங்கு வந்து சென்றபிறகு கழகத்திற்கு ஆதரவு பெருகி இருக்கிறது.

7 ஆண்டு காலத்தில் கழக ஆட்சி பல்வேறு நன்மைகளை மக்களுக்காக செய்து வருகிறது இதை மக்கள் உணர்ந்து இருக்கின்றனர்

புயல்வெள்ளம் ஏற்பட்ட போது கழக அரசு போர்க்கால அடிப்படையில் நிவாரணப்பணிகள் செய்தது

மக்கள் இதையும் மனதில் வைத்து இருக்கிறார்கள்.

திமுகவுக்கு ஆதரவாக திராவிடர் கழகத்தினர் இன வெறிப்பிரச்சாரம் செய்கின்றனர் இது மக்களிடம் வெறுப்பை ஏற்படுத்தி உள்ளது

பஞ்சாப் நிலை உருவாகும் என்று திமுகவினர் பேசி வருகின்றனர் அமைதியை விரும்பும் தமிழக மக்கள் இதையெல்லாம் விரும்பவில்லை.

முதல்வர் புரட்சித் தலைவரே தொடர்ந்து தமிழக முதல்வராக இருக்க வேண்டும் என்று மக்கள் விரும்புகிறார்கள் ஆகவே கழகம் வெற்றி பெறுவது நிச்சயம்

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்

## மயிலாடுதுறை புளுகு பிரச்சாரத்தை கண்டித்து

# தி. மு. க. லாரியை கேரோ செய்து பெண்கள் மறியல்

## மன்னிப்பு கேட்டு வெளியேறினர்

**மயிலாடுதுறை. மே 18. மயிலாடுதுறையில் திமுக வினர் புளுகு பிரச்சாரம் செய்தபோது லாரியில வந்த திமுகவினரை பெண்கள் கேரோ செய்து மறியல் செய்தனர்.**

பிறகு மன்னிப்புகேட்டு அந்த இடத்தில் இருந்து திமுகவினர் வெளியேறினர்.

மயிலாடுதுறையில் கழக வேட்பாளராக தம்பி பாலவேலாயுதம், போட்டியிடுவது தெரிந்ததே.

நேற்று இறுதிக் கட்ட பிரச்சாரம் தீவிரமாக நடந்தது.

தோல்வி ஜுரம் கண்டுள்ள திமுகவினர் புளுகத் தொடங்கினர் அவதூறாவும், அநாகரீகமாகவும் பேசி வாக்குக்கேட்டனர்.

மயிலாடுதுறை தொகுதியில் கோடங்குடி என்ற சிறு கிராமம் உள்ளது

அந்த இடத்தில்

(4ம் பத்தி பார்க்க)

(7-ம் பத்தி தொடர்ச்சி)

திமுக வினர் லாரி ஒன்றில் வந்து தேர்தல் பிரசாரம் செய்தனர்.

எம்.ஜி. ஆர் ஆட்சியில் அரிசி விலை ஏறிப்போச்சு கருணாநிதி ஆட்சியில் அரிசி விலை குறைவாக இருந்தது என்று கூறினர்

அதோடு தரக்குறைவாக அநாகரீகமாகவும் அவர்கள் பேசி பிரசாரம் செய்தனர்.

இதை அந்த ஊர்ப் பெண்கள் கேட்டு சகிக்க முடியாமல் தி.மு.க வினர் வந்த லாரியைசுற்றி வளைத்து கேரோ செய்தனர்.

அரிசிவிலை எங்கேய்யா ஏறி இருக்கு? யார் ஆட்சியில் ஏறி இருந்தது என்று கேள்விகளை தொடுத்தனர்

ஏனய்யா இப்படி பொய் புளுகு எல்லாம் என்று அவர்கள் கேட்டனர்.

லாரியில்வந்த திமுகவினர் பதில்பேச முடியாமல் திணறினர்.

பிறகு அந்த தாய்மார்களிடம் தி.மு.க வினர் மன்னிப்புகேட்டு அந்த இடத்தைவிட்டு சென்றனர்.

# டாக்டர் நாவலர் தேர்தல் பிரச்சாரம்

மயிலாடுதுறையில் கழக வேட்பாளர் தம்பிபலவேலயுதத்தை ஆதரித்து இரவுபகலாக தீவிர பிரச்சாரம் நடந்து வருகிறது.

முதல்வர் புரட்சித் தலைவரது வருகைக்குப் பிறகு எழுச்சி பெற்றுள்ள மயிலாடுதுறையில் கழகத்தின் சார்பில் தீவிர பிரச்சாரம் நடந்து வருகிறது

வேன்கள், சைக்கிள் ரிக்ஷாக்கள், சைக்கிள்கள் டிராக்டர்களில் கழகத் தோழர்களும், தோழமைக் கட்சியினரும் பிரசாரம் செய்கின்றனர்,

மயிலாடுதுறை நகரிலும் கிராமங்களிலும் பிரச்சாரம் வாக்கு சேகரிப்பு முடுக்கி விடப்பட்டுள்ளது.

நிதிஅமைச்சர் டாக்டர் நாவலர் இன்று பல்வேறு இடங்களில் தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் பேசினார்,

அமைச்சர்கள் அரங்கநாயகம், எஸ்ஆர்.ராதா, கலைமணி ஆகியோரும் தீவிர பிரச்சார பணியில் ஈடுபட்டுள்ளனர்.

## அண்ணாநகர் உட்பட 4 தொகுதிகளிலும்

# தி. மு. க. வன்முறை திட்டம்: மூப்பனார் - பழனியாண்டி புகார்

**தஞ்சாவூர், மே 18- அண்ணாநகர் உட்பட 4 தொகுதிகளிலும் தி. மு க.வினர் நடத்தும் வன்முறை பற்றி தேர்தல் கமிஷனுக்கு இந்திரா காங்கிரஸ் பொதுச்செயலாளர் கருப்பையா மூப்பனாரும், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டியும் புகார் கொடுத்துள்ளனர்.**



அண்ணாநகர், உப்பிலியாபுரம், மயிலாடுதுறை, தஞ்சாவூர் ஆகிய 4 சட்டசபை தொகுதிகளிலும் 20-ந் தேதி வாக்குப்பதிவு நடைபெறுகிறது

இதில் அண்ணாநகர், உப்பிலியாபுரம், மயிலாடுதுறை தொகுதிகளில் கழகம் போட்டியிடுகிறது.

தஞ்சாவூர் இந்திரா காங்கிரசுக்கு விட்டுக் கொடுக்கப் பட்டுள்ளது.

கழகமும், இந்திரா காங்கிரசும் இந்த நான்கு தொகுதிகளிலும் தீவிர பிரசாரத்தில ஈடுபட்டுள்ளன.

இந்த தேர்தலில் திமுகவினர் திட்டமிட்டு வன்முறை வெறியாட்டங்களில் ஈடுபடத் தொடங்கி விட்டனா.

குறிப்பாக அண்ணா நகர் தொகுதியில் தி. மு. க வினர் வன்முறைக்கு திட்டங்கள் தீட்டி செயல்பட்டு வருகின்றனர்,

கழக அமைச்சர்கள் மீதும் கழக தோழர்கள் மீதும் தாக்குதல் நடத்தியதும் தெரிந்ததே.

மயிலாடு துறையில்கழக எம், எல்.ஏவை இழுத்துப் போட்டு அடித்தனர். கத்திக்குத்தும் நடந்துள்ளது.

தஞ்சை, உப்பிலியாபுரத்திலும் கலவரம் செய்ய திட்டமிட்டுள்ளனர்.

அண்ணாநகரிலும்மற்ற 3 தொகுதிகளிலும் திமுகவினரின் திட்டமிட்ட வன் முறை குறித்து தேர்தல் கமிஷனுக்கு இந்திரா காங்கிரஸ் பொதுச் செயலாளர் கருப்பையா மூப்பனாரும், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் பழனியாண்டியும் புகார் கொடுத்துள்ளனர்.

இந்த 4 தொகுதிகளிலும் உள்ள பல வாக்காளர்களிடம் இருந்து திமுகவினர் வன்முறை குறித்து புகார்கள் வந்துள்ளன

குறிப்பாக அண்ணா நகர் தொகுதியில்இருந்து பலர் இதுபற்றி தெரிவித்திருக்கிறார்கள்.

ஆகவே இந்த தேர்தல் அமைதியாக நடக்க தேவையான நடவடிக்கைகளை எடுங்கள் என்று தேர்தல் கமிஷனுக்கு மூப்பனாரும், பழனியாண்டியும் புகார் கொடுத்துள்ளனர்.





## அண்ணாநகர் தொகுதியில்

# 20 ஆயிரம் தி. மு. க. குண்டர்கள்: வன்முறை வெறியாட்ட திட்டம்

## அமைச்சர் அண்டே தகவல்

**சென்னை, மே 18-அண்ணாநகர் தொகுதியில் திமுகவினர் கழகத் தோழர்களைத் தாக்கி தேர்தல் அலுவலகத்திற்கும் தீ வைத்தனர், 20 ஆயிரம் குண்டர்களோடு "அச்சுறுத்தல் செய்து கள்ள ஓட்டு போடவும் திட்டமிட்டுள்ளனர் என்று அமைச்சர் அண்டே தெரிவித்துள்ளார்.**

சென்னை அண்ணாநகர் தொகுதி கழக தேர்தல் பணிக்குழு தலைவர் டாக்டர் அண்டே கூறியதாவது:-

சென்னை அண்ணா நகர் தொகுதியில் உள்ள செம்மண்பேட்டைஅருகே தி. மு. க. வன்முறையாளர், கழகத்தின் வேன்களை தாக்கியும தேர்தல் அலுவலகத்தை வெட்டி தீவைத்தும் கழக மகளிர்களையும் தாக்கியுள்ளனர். இதில் 7 பேர் காயமடைந்துள்ளனர்.

டெய்லர்ஸ் ரோடில் கருணாநிதியுடன் சென்றவர்களை கழகத்தினர் தாக்கியதாக ஒரு போலி நாடகத்தை நடத்தியிருக்கிறார். அண்ணா தி.மு.க. வினர் தான் வன்முறையில் ஈடுபட்டார்கள் என்பது அப்பட்டமான பொய்யாகும்.

அண்ணா தி மு க வினர் வன்முறையில் ஈடுபட்டுள்ளனர் என்றும் தான் இனி பேசப் போவதில்லை என்றும் ஒருநாடகம் நடத்தி விட்டு மீண்டும் அங்கு பேசிவிட்டு தான் வன்முறையாளர் கும்பலுடன் கருணாநிதி வெள்ளாளத் தெருவுக்குச் சென்றார்.

### திமுகவினர் வன்முறை

அங்கு வன்முறையாளர் கும்பல் 7 வேன்களிலும் 15 கார்களிலும் கற்கள், கத்திகம்புகளுடன்சென்று வன்முறையை அவிழ்த்து விட்டுச் சென்றனர்.

வெள்ளாளத் தெருவில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கழகக் கூட்டத்தின் மின் விளக்குகளை அடித்து நொறுக்கியும் பந்தலை வெட்டி வீழ்த்தியும் கழகபிரச்சாரவேனிலிருந்த பெண்களை தாக்கி காயப்படுத்தினர்.

கம்புகளையும் அரிவாள்களையும் எடுத்து பொது மக்களிடையே பீதியை கிளப்பி வன்முறையில் ஈடுபட்டு விட்டு அண்ணா திமுக வினர் அராஜகத்தில் ஈடுபடுகிறார்கள் என்று பொய்ப் பிரச்சாரத்தை பத்திரிகைகளில் பரப்பியிருக்கிறார்.

தோல்வி பயம் இந்த தேர்தலில் கருணாநிதிக்கு ஏற்பட்டு விட்டது. வன முறை அராஜகத்தின் மூலம் பொது மக்களை பயமுறுத்தி அச்சுறுத்தி வாக்குச்சாவடிக்கு வரவிடாமல் செய்து அந்த நேரத்தில் வெளி மாவட்டங்களிலிருந்து கொண்டு வந்துள்ள 20 ஆயிரத்திற்கும் மேற்பட்ட குண்டர் படையை வைத்து கள்ள ஓட்டு போட்டு ஜெயிக்க கருணாநிதி திட்டமிட்டுள்ளார்.

ஆனால் கருணாநிதியினுடைய தோல்வி பல நாடகத்திற்கும்வன்முறை அராஜக அரசியலுக்கும் மக்கள் இந்த தேர்தலில் எச்சரிக்கையாக இருந்து பாடம் புகட்ட வேண்டும் என வேண்டுகிறேன்.

இவ்வாறு டாக்டர் அண்டே கூறினார்.




PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor C. PARASURAMAN


## தேர்தல் களத்தில் நமது பாசறை

### வெங்கட சுப்பிரமணியம்

காஞ்சிபுரம் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் பி. வெங்கடசுப்பிரமணியம் தலைமையில் கழக தோழர்கள் திருவள்ளுவர்புரம்பகுதியில் வீடு வீடாக சென்று கழக வேட்பாளரை ஆதரித்து பிரச்சாரம் செய்தனர்.

82வது வட்டத்தில் பி. மாசிலாமணி, சேலம் ஆறுமுகம், ராமபத்திரன், பி. வெங்கட சுப்பிரமணியம், காஞ்சி ஒன்றியம் துணை செயலாளர் வெங்கடாபுரம் வி. கிருஷ்ணன், கே. கிருஷ்ணன், டி. தயாநிதி கே.கோபால், ஏ.கிருஷ்ணமூர்த்தி மாணவர் சம்பத், ஏ. எஸ். மூர்த்தி, கந்தசாமி, அண்ணாமலை மற்றும் கழக - மன்றத்தினர் வீடு வீடாகச் சென்று பிரசாரம் செய்தனர்.

### மதுசூதனன்

79 80 வது வட்டங்களில் சேப்பாக்கம் தொகுதி எம்.ஜி.ஆர் மன்றங்களின் சார்பில் சென்னை மாவட்ட எம் ஜி. ஆர். மன்ற செயலாளர் இ.மதுசூதனன் எம் எல் சி தலைமையில் சாந்திநகர், கில்நகர், நமச்சிவாயபுரம் திருவேங்கடபுரம், திருவள்ளுவர்புரம், சக்தி நகர், சங்கராபுரம், பஜனை கோயில் தெரு, அண்ணா நெடும்பாதை, பாஷா சாகிப் தெரு, அப்துல்லா தெரு, சர்புதீன் சாயபு தெரு கான் சாயபு தெரு, நலகண்டன் தெரு ஆகிய இடங்களில் வீடுவீடாகச் சென்று வாக்காளர்களை சந்தித்து ஓட்டுக கேட்டனர். கழக வழக்கறிஞா வி. ராஜ்குமார், வி. என். சுப்பிரமணி, அ.வ. செல்லக்கண்ணன், எம் எல் ரவீந்திரன், ஏ. அருணகிரி, ஜி. பழனி, ஆர் சுந்தரம், எஸ் ஆறுமுகம் ஆகியோர் உடன் சென்றனர்.

### 79-வது வட்டம் கழக தோழர்கள்

அண்ணாநகர் தொகுதி 79 வதுவட்டத்தில்பாஷா சாகிப் தெரு கில்நகர், அபித்நகர், அண்ணா மெயின் ரோடு ஆகிய பகுதிகளில் கழக வேட்பாளரை ஆதரித்து அமைச்சர் கே. ஏ. கே. ஆற்காடு சேதுராமன் எம் எல் ஏ தலைமையில் கழகத் தோழர்கள ஓட்டு கேட்டனர்.

4-ம் பக்கம் தொடர்ச்சி

வேட்பாளர் பி. எல். ராதாகிருஷ்ணனும்உடன் சென்றார்.

நமச்சிவாயபுரம் பகுதியில் கே. ஆர். சின்னராஜ் எம் எல்.ஏ, வெங்கடசுப்பிரமணியம் எம்.எல்.ஏ., மணிமாறன, ராமமூர்த்தி, பாபு, வெங்கடேசன், வருசூர் வில்வம், ஏ. பி. பதமநாபன, என். ராஜேந்திரன், ஜெய்சர், மற்றும் மகளிர் பிரிவினருடன ஓட்டு சேகரித்தனர். மக்கள் வெள்ளம் கழக வேட்பாளருக்கே எங்கள் ஓட்டு என்று உறுதி அளித்தனர்.

(3-ம் பக்கம் பார்க்க



- ★ சென்ற இடமெல்லாம் மக்கள் வெள்ளம்
- ★ ஆரத்தி எடுத்து தாய்க்குலத்தினர் வரவேற்ற காட்சி

## அண்ணாநகர் தொகுதியில்

# புரட்சித்தலைவர் மின்னல்வேக பிரசாரம்

## நள்ளிரவிலும் கரைபுரண்டோடிய மக்கள் கூட்டம்

**சென்னை, மே. 18- அண்ணாநகர் தொகுதியில் நேற்று இரவு முதல்வர் புரட்சித்தலைவர் மின்னல் வேக தேர்தல் பிரசாரம் செய்தார். புரட்சித்தலைவர் சென்ற இடம் எல்லாம் மக்கள் வெள்ளம் தாய்க்குலத்தினர் ஆரத்தி எடுத்து, திருஷ்டி சுற்றி வரவேற்றனர். நள்ளிரவிலும் அலைஅலையாக மக்கள் திரண்டு வந்து புரட்சித்தலைவரது பேச்சைக் கேட்டனர்.**

சென்னை அண்ணா நகர் தொகுதி சட்டமன்ற இடைத்தேர்தலில் போட்டியிடும் கழக வேட்பாளர் பி. எல், ராதாகிருஷ்ணனுக்கு இரட்டைஇலை சின்னத்தில் முத்திரையிட்டு வெற்றி பெறச் செய்யுமாறு முதல்வர் புரட்சித்தலைவர் நள்ளிரவு 12. 15 மணிவரை பிரச்சாரம் செய்தார்.

நேற்று மாலை 7- 10 மணிக்கு அரும்பாக்கம் பஸ் நிலையத்திலிருந்து தேர்தல் பிரச்சாரத்தை துவக்கியமுதல்வர் புரட்சித் தலைவர் அண்ணாநகர் தொகுதியில் 77, 75, 74, 73, 72, 82 ஆகிய வட்டங்களில் பல்வேறு இடங்களில் திறந்த வேனில் நின்று பிரச்சாரம் செய்தார்.

முதல்வர் புரட்சித் தலைவருடன் கழக வேட்பாளர் பி. எல். ராதா கிருஷ்ணன் திறந்த வேனில் நின்று மக்களை கும்பிட்டு வாக்குகள் கேட்டார்.

### முதல்வர் முழக்கம்

பிரச்சாரத்தின் போது அமைச்சர்கள் கே.ஏ.கே., பொன்னையன், ராகவானந்தம், அண்டே முத்துசாமிமற்றும்திருப்பூர்மணி மாறன் எம்எல்ஏ சென்னை மாவட்ட கழகச் செயலாளர் ஜேப்பியார் எம்.எல்.சி., மாவட்ட எம் ஜிஆர். மன்றச் செயலாளர் இ. மதுசூதனன் எம் எல் சி வ. கோதண்டராமன் ஆகியோர் வந்தனர்.

அரும்பாக்கம் பஸ் நிலையத்தில்பிரச்சாரத்தை துவங்கிய முதல்வர் புரட்சித்தலைவர் ஜானகிராமன் காலனி, வள்ளுவர் தெரு, பாஞ்சாலை அம்மன் கோவில் தெரு, பெருமாள்கோயில் தெரு, பெருமாள்பிள்ளை லைன் ஆகியவற்றின் வழியாக திறந்த வேனில் நின்று இரண்டுவிரல்களையும் காட்டி இரட்டை இலைச் சின்னத்தில் வாக்களிக்குமாறு கேட்டுக கொண்டார்.

நடுவக்கரையில்திரண்டிருந்த மக்களிடையே வேனில் நின்றபடியே உரையாற்றினார் முதல்வர் புரட்சித்தலைவர்.

### தாய்க்குலம் வரவேற்பு

எம் ஜி ஆர். காலனி, வழியாக வந்து காந்தி காலனியில் கூடியிருந்த மக்களிடையே உரையாற்றினார்.

என். எஸ்.கே நகரிலும் உரையாற்றிய புரட்சித் தலைவர் அறிஞர் அண்ணா மருத்துவமனை அருகே கூடியிருந்த கூட்டத்திலேயும் உரையாற்றினார்.

பிரிவிரி சாலை வழியாக பாரதி நகருக்கு முதல்வர் புரட்சித்தலைவர் சென்றார். அங்கு பல்லாயிரக்கணக்கான மக்கள கூடியிருந்து வரவேற்றனர் அந்த மக்களிடையேஉரையாற்றி விட்டு பின்னர் பெரிய கூடல் திரு. வி. க. உயர்நிலைப் பள்ளி வழியாக கெஜலட்சுமி காலனி, கதிரவன காலனி, மஞ்சக் கொல்லை ஆகிய தெருக்கள் வழியாக சென்றார்.

திருவீதியம்மன் கோவில் தெருவில் கூடியிருந்த மக்களிடையே முதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றினார். பெண்கள் ஆரத்தி எடுத்து வரவேற்றனர் முதல்வர் புரட்சித தலைவரை

சுண்ணாம்பு கால்வாய் தெரு, மேற்கு அரசமரத் தெரு, மேற்கு காசு தோட்டம், பெருமாள் கோவில் தெரு வழியாக முதல்வர் புரட்சித் தலைவர் வந்த போது ஆங்காங்கு திரளாக ஆண்களும் பெண்களும் கூடியிருந்து முதல்வர்புரட்சித் தலைவரை வரவேற்று ஆரத்தி எடுத்தனர்.

லட்சுமி டாக்கீஸ் தெருவில் முரளிகிருஷ்ணா திரையரங்கு அருகே முதல்வர் புரட்சித்தலைவர் வேனில் நின்று பிரச்சாரம் செய்தார்.

நீச்சல் குளம் அருகே கூடியிருந்தமக்களிடையே முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார். அங்கு தாய்மார்கள் முதல்வர் புரட்சித்தலைவருக்கு திருஷ்டி சுற்றி தேங்காய் உடைத்தனர்.

### மக்கள் வெள்ளம்

தமிழர்நகர், ஆர். வி நகர் வழியாக சென்று வ.உ.சி. நகரில் முதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றினார்.

குஜ்ஜிநாயக்கன் தெரு, மாண்டபம் ரோடு, நியூ ஆவடி ரோடு வழியா திறந்த வேனில் நின்றபடியே முதல்வர் புரட்சித் தலைவர் வாக்குகள் கேட்டார்.

நள்ளிரவிலும் அப்பாராய கிராமணித் தெரு, கந்தப்பிள்ளைத் தெரு, அப்பாராவ் தோட்டம், பிள்ளையார் கோவில் தெருவின் வழியாக முதல்வர் புரட்சித்தலைவர் சென்றபோது ஆங்காங்கே ஆரத்தி எடுத்து வரவேற்றனர்.

இரவு 12 மணிக்கு வைத்தியநாதமுதலி தெருவில் பல்லாயிரக்கணக்கான மக்களிடையே முதல்வர் புரட்சித்தலைவர் உரையாற்றினார்,

### 70வது வட்ட மகளிர் அணி பிரசாரம்

சென்னை, மே. 18- சென்னை அண்ணாநகர் தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் பி. எல். ராதாகிருஷ்ணனை ஆதரித்து 70வது வட்டம் சார்பில் மகளிர் அமைப்பாளர் வி. பேபி தலைமையில் ஆலந்தூர் கே. ஆண்டாள், சம்பூர்ணம், பல்லவன் போக்குவரத்துக் கழகத்தைச் சேர்ந்த ரங்கமணி ஆகியோர் தீவிர பிரச்சாரம் செய்தனர்.

வீடுவீடாகச் சென்று இரட்டை இலை சின்னத்தில் ஓட்டளிக்குமாறு வாக்காளர்களை கேட்டுக் கொண்டனர்.

### 79 வது வட்டம்

114 வது வட்டம் சார்பில் அ. சுப்பையா தலைமையில் எம். சேகர், எம் ராமசாமி, [illegible], நாகப்பன், ஏ.வீ. நீதி, [illegible]மாறன், சந்தியப்பன், [illegible]ம். கலா, சங்கர், [illegible] ராஜேந்திரன், தாஸ், [illegible]சாமி ஆர் பி ராஜேந்திரன் கரிகாலன், மற்றும் கழகத் தோழர்கள் 79 வது வட்டத்தில் நமசிவாய புரம், திருவேங்கட புரம், [illegible]களில் கழக வேட்பாளர் பி. எல். ராதாகிருஷ்ணனுக்கு ஆதரவாக ஓட்டு கேட்டனர்.

## தி. மு. க. காலிகளால்

# கழக தோழர் தாக்கப்பட்டார்

சென்னை, மே. 18— அண்ணாநகர் தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் பி.எல்.ராதாகிருஷ்ணனுக்கு ஆதரவாக அண்ணா நற்பணி மன்றம் சார்பாக அயன்புரம் பணிமனை போக்கு வரத்து ஊழியர்கள் வீடுவீடாகச் சென்று ஓட்டு சேகரித்தனர்.

அப்போது கழகத் தோழர் சீனிவாசனை சில தி.மு.க. காலிகள் தாக்கினர் அவர்களை அண்ணா நற்பணிமன்ற தலைவர் பி. அருள்சாமி செயலாளர் டி. சண்முகம் ஆர். பழனிச்சாமி, ஆர். டில்சன், கே. சடையாண்டி, பி. அண்ணாமலை, இஸ்வர்ஷா சலாவுதீன், மோகன், தணிகாசலம் மற்றும் கழகத் தோழர்களும் பொதுமக்களும் விரட்டி அடித்தனர்.

---

# யாருக்கு உங்கள் ஓட்டு?

இந்திரா காந்தியின்
ஆசி பெற்றவர்கள்
கழக
வேட்பாளர்கள்

புரட்சித்தலைவரின்
ஆதரவைப் பெற்றவர்கள்
கழக
கூட்டணி வேட்பாளர்கள்

இந்தியா வளம்பெற
இருபதம்சத் திட்டங்களை
நிறைவேற்றி வருபவர்
அன்னை இந்திரா காந்தி

தமிழகம் செழிப்புற
தன்னிகரற்ற திட்டங்களை
உருவாக்கி வருபவர்
புரட்சித்தலைவர்

நாடு வாழவும்
நலிவு தீரவும்

மத்திய அரசு பலமுள்ளதாகத் திகழவும்...
மாநில அரசு வலுவுள்ளதாக விளங்கவும்...

வாட்டம் போகவும்
வளங்கள் சேரவும்

கழக-
இந்திரா காங்கிரஸ்
கூட்டணி வேட்பாளர்கட்கே
வாக்களிப்பீர்!

"இரட்டை இலை"
புதிய தமிழகத்தின்
உதயத்திற்கான
அடையாளம்!

"கை"
எதிர்கால நல்வாழ்வின்
நம்பிக்"கை"

---

ஃ அண்ணாநகர் தொகுதி பற்றி சட்டசபையில் கருணாநிதி பேசி இருக்கிறாரா?

ஃ மக்களுக்காக கொண்டு வரப்படும் திட்டங்களை முழுமூச்சாக எதிர்க்கிறார்

## வீட்டுக்கு ஒருவர் வேலை திட்டத்தின்கீழ்

## வரும் டிசம்பருக்குள்

# லேட்சம்பேருக்கு வேலைவாய்ப்பு

## புரட்சித்தலைவர் முழக்கம்



சென்னை, மே. 18- அண்ணாநகர் தொகுதியின் எம். எல். ஏ. ஆக இருந்த கருணாநிதி அண்ணாநகர் தொகுதி பற்றி சட்டசபையில் பேசி இருக்கிறாரா? மக்களுக்காக கொண்டு வரப்படும் திட்டங்களை முழு மூச்சாக எதிர்க்கிறார் என்று முதல்வர் புரட்சித்தலைவர் தெரிவித்தார். வீட்டுக்கு ஒருவர் வேலை திட்டத்தின் கீழ் வரும் டிசம்பருக்குள் 6 லட்சம் பேருக்கு வேலை வாய்ப்பு அளிக்கப்படும் என்றும் முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

அண்ணாநகர் தொகுதியில் கழக வேட்பாளர் பி.எல்.ராதாகிருஷ்ணனை ஆதரித்து முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று இரவு பல்வேறு இடங்களில் பேசினார்.

திறந்த வேனில் நின்று அண்ணாநகர் தொகுதியில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

வருகின்ற தேர்தலில் நீங்கள் இரட்டை இலைச் சின்னத்தில் வாக்களிக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்வதற்காகவந்திருக்கிறேன்.

அண்மையில் கருணாநிதி ஒரு கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

அவர் ஆட்சியில் 17 லட்சம் குழந்தைகளுக்குத் தான் உணவு கொடுக்க வேண்டியது இருந்ததாம். "இப்போது எம்.ஜி.ஆர். ஆட்சியில் 63 லட்சம், 73 லட்சம் குழந்தைகளுக்கு சத்துணவு போட வேண்டியது இருக்கிறது என்றால் ஏழ்மை அதிகமாகி விட்டது" என்று பேசியிருக்கிறார்

அரிச்சுவடி படிக்காதவன் கூட இந்தகருத்தைச் சொல்ல மாட்டான்.

இப்போது 10 வயது உள்ள குழந்தைகள் ஏறத்தாழ 25 லட்சம் பேர் உணவு உண்கிறார்கள் என்றால் இந்தக் குழந்தைகள் 1974-ம் ஆண்டு தானே பிறந்திருக்கவேண்டும்? யார் ஆட்சியில் பிறந்த குழந்தைகள்?

### அன்றுநடந்த தவறு

அன்றே கணக்கிட்டு இந்த குழந்தைகளின் பெற்றோருக்கு ஏன் வேலை வாய்ப்பு ஏற்பாடு செய்யவில்லை?

அவர் மின்சார திட்டங்களுக்கும் ஏற்பாடு செய்யவில்லை. பல்கலைக்கழகங்கள் துவங்கவும் ஏற்பாடு செய்யவில்லை.

மகளிர் பல்கலைக் கழகம், பாரதிதாசன் பல்கலைக்கழகம் பாரதியார் பல்கலைக் கழகம், தமிழ் பல்கலைக் கழகம் ஆகியவற்றை தமிழனே இல்லை என்று என்னைகூறுகிறார்களே, அந்த நான் தான் கொண்டு வந்தேன். தமிழன் என்று சொல்லுபவர் ஏழு ஆண்டு ஆட்சியில் ஒன்றும் செய்யவில்லை.

இந்த தொகுதியில் 2 முறை கலைஞர் கருணாநிதி சட்டமன்றஉறுப்பினராக இருந்திருக்கிறார். அப்போது இந்த தொகுதியைப்பற்றிஒரு நாளாவது சட்டசபையில் பேசியிருக்கிறாரா? இது வேண்டும் என்று சொல்லி இருக்கிறாரா?

(இல்லை இல்லை' கூட்டத்தினர் குரல்) அதிலிருந்தேநீங்கள் புரிந்து கொள்ள வேண்டும்.

தஞ்சையில் ஏழைக்கும் பணக்காரருக்கும்போட்டி என்று கருணாநிதி கூறுகிறார். தங்கமுத்து நாட்டார் நாடார் அல்ல. அவர் 4 பஸ்களுக்கு சொந்தக்காரர். அவர் ஏழையாம். வாண்டையார் பரம்பரை பணக்காரர். அவர் பணக்காரராம்.

### 80-ம் ஆண்டில் தெரியாதா?

நான் பணிவோடு கேட்டுக்கொள்கிறேன். 1980ம் ஆண்டு இந்திரா காங்கிரசோடு கூட்டு வைத்து இருந்தாரே அப்போது வாண்டையார் இந்திரா காங்கிரசில் தானே இருந்தார்? அப்போது மட்டும் கருணாநிதி எப்படி பணக்காரக் கட்சியோடு கூட்டுவைத்தார்? இப்படியெல்லாம் பேசுவது அரசியலுக்கு நல்லதல்ல.

பி.ஏ. எம்.ஏ. படித்து விட்டு வேலைவேண்டும் என்று கேட்பவர்களிடம் "என்ன வேலைவேண்டும்" என்று கேட்டால், ஏதாவது வேலை என்கிறார்கள். "எனக்கு இந்த தொழில் தெரியும்" என்று சொல்லும் நிலை வரவேண்டும்.

அதனால்தான் 2 வயதில் இருந்து 10 வயது வரை சத்துணவுஎன்பதை 15 வயது வரையில் என்று நீடிப்பு செய்து இருக்கிறோம்.

அவர்களுக்கு தொழில் கல்வி கற்றுக் கொடுத்து அவர்கள் படித்துவிட்டு வெளியே வரும் போது வேலை காத்திருக்க வேண்டும் அல்லது அவர்கள் சொந்தமாக ஒரு தொழிலை தொடங்க வேண்டும் என்பதற்காக இந்த புதிய திட்டத்தை கொண்டு வந்திருக்கிறோம்.

இந்த தொழில்கல்வி திட்டத்தை 1985-ம் ஆண்டு ஐந்தாண்டு திட்டத்தில் சேர்த்துக் கொள்வதாக பிரதமர் இந்திரா காந்தி ஒப்புக் கொண்டிருக்கிறார்.

### சத்துணவுக்கு ரூ. 20 கோடி

சத்துணவு திட்டத்திற்காக இந்த ஆண்டு 20 கோடி ரூபாய் தருவதாக பிரதமர் இந்திராகாந்தி கூறியிருக்கிறார். இந்த திட்டத்தையும் அடுத்த ஆண்டு முதல் திட்டத்தில் சேர்த்துக் கொள்வதாக கூறியிருக்கிறார்.

சத்துணவு திட்டத்தை சோம்பேறி திட்டம், பிச்சைக்காரத்திட்டம் என்கிறார் கருணாநிதி.

2 வயது குழந்தைக்கு சத்துணவு கொடுக்கிறோம். அந்த குழந்தை எங்கு போய் வேலைசெய்யப்போகிறது?

இந்த தேர்தல் நண்பர் சோ. மா. ராமச்சந்திரனுக்கும், ராதா கிருஷ்ணனுக்கும் உள்ள போட்டியல்ல. கருணாநிதிக்கும், எம். ஜி. ஆருக்கும் உள்ள தேர்தல்.

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்காக கருணாநிதி ராஜினாமாச் செய்தாரே என்ன ஆயிற்று?

நாங்கள் வேண்டுகோள் விடுத்தோம் அமெரிக்க தம்பதிகளை விட்டுவிட்டார்கள். இதெல்லாம் நீங்கள் (மக்கள்) எனக்கு தரும் ஆதரவால்தான்.

நான் ஆட்சிக்கு வரும் முன்னால் சொன்னதை இப்போது கூறவிரும்புகிறேன். நாட்டில் பிறந்து விட்டபிறகு நாட்டில்வாழ வழி செய்ய வேண்டியது ஜனநாயகத்தில் அரசின் பொறுப்பு என்று கூறியிருக்கிறேன்.

### கம்பிதான் இருந்தது

57லும் 62லும் 67லும் இதை சொல்லித்தான் ஓட்டுக்கேட்டேன். 71ல் அண்ணா இல்லை, தி.மு.க.வுக்காக அதையே சொல்லி ஓட்டுகேட்டேன் 180 இடம் இது வரை தமிழகத்தில் எந்த கட்சிக்கும் இல்லாத வகையில் மக்கள் கொடுத்தார்கள் ஆனால் கருணாநிதி அதனை செய்ய தவறிவிட்டார்.

கருணாநிதி ஆட்சியில் மின்சாரத்துக்கு கம்பிகளைத்தான் இழுத்தார்களே தவிர மின்சாரத்தை உற்பத்தி செய்யவில்லை.

அப்போது 13 கோடி ரூபாய் செலவில் 1000குடியிருப்புகளுக்குத்தான் குடிநீர் வசதி செய்துதரப்பட்டது ஆனால் நாங்கள் 18 ஆயிரத்து 167 குடியிருப்புகளுக்கு குடிநீர் கொடுத்து இருக்கிறோம்.

சத்துணவு திட்டத்தின் மூலம் ஒரு லட்சத்து 86 ஆயிரம் தாய்மார்களுக்கு வேலை வாய்ப்பு கொடுத்திருக்கிறோம். அதில் 20 ஆயிரம் பேர்களுக்கு மேல் விதவைகள்.

குழந்தைகள் பையை எடுத்துக் கொண்டு போகிற போது, பையில் புத்தகம் இருக்கிறதோ இல்லையோ தட்டு இருக்கிறது என்று கருணாநிதி கூறியிருக்கிறார். அதாவது பிச்சை எடுக்கப் போகிறதாம்.

### ரூ. 10க்குஅரிசி விற்றதே?

சத்துணவுக்காக செலவழிக்கும்பணம்யாருடைய பணம்? மக்களின் பணம். குழந்தைகள்யாரும்பிச்சை எடுக்கவில்லை நாட்டில் எல்லோரும் வரி கொடுக்கிறார்கள். வரிப்பணத்தில் சத்துணவு கொடுக்கிறோம்.

தன்னிறைவுத் திட்டத்தின்கீழ் 240கோடி ரூபாய் செலவு செய்து புதிய இணைப்பு சாலை, மருத்துவமனை, பள்ளிக்கூடம், பஸ் வசதி செய்து தந்திருக்கிறோம்.

கருணாநிதி இவைகளை செய்திருந்தால் ரிப்பேர் செய்து பராமரிக்கிற வேலைதான் நாங்கள் செய்யவேண்டி வந்திருக்கும்.

வறட்சியான நேரத்திலும் ஒரு கிலோ அரிசி 1.75 காசு, 2 ரூபாய் என்று நியாய விலைகடைகளில் கொடுப்பதை தொடர்ந்து நிறைவேற்றுகிறோமா இல்லையா?

கருணாநிதி ஆட்சியின் போது நல்ல விளைச்சல் இருந்த நேரத்திலும் தஞ்சையில் இருந்து நெல் அரிசியை வெளி மாநிலத்திற்கு வெளிநாட்டிற்கு கேரளா மற்றும் குவைத் போன்ற நாடுகளுக்கு எடுத்துச் செல்ல அனுமதிக்கப்பட்டது.

அப்போது 9லட்சம்டன் நெல் அரிசி கொண்டு போகப்பட்டது என்று தஞ்சையில் சுற்றுப்பயணம் செய்த போது அறிந்தேன். அதனால் தான் கன்னியாகுமரி வரை படி அரிசி 10 ரூபாய்க்கு மேல் விற்றது.

### வீராணம் திட்டம்

நாங்கள் வறட்சியான நேரத்திலும் 67 கோடி ரூபாய்க்கு மேல் நஷ்டப்பட்டு கிலோ 4 ரூபாய் 3 ரூபாய் என்று வாங்கி நியாயவிலைக் கடைகளில் கிலோ ரூ. 1.75 காசு, 2 ரூபாய்க்கு மேல் போகாமல் வழங்குகிறோம்,

மக்களுக்காக கொண்டு வரப்படும் திட்டங்களை முழுமூச்சாக கருணாநிதி எதிர்க்கிறார்.

சென்னையில் கடுமையான வறட்சி வந்தது. குடிக்க தண்ணீர் இல்லை.

நாங்கள் லாரிகள்மூலம் குடி நீர்தந்தோம். மத்திய அரசும் வேகன்களில் தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தது.

கருணாநிதி வீராணம் திட்டத்தை செயல்படுத்து என்கிறார். வீராணம் திட்டத்தை செயல்படுத்தினாலும் மழைபெய்து வீராணம்ஏரி நிரம்பினால் தான் சென்னைக்கு தண்ணீர்வரும்.

நான் என் தம்பி என்.டி.ஆருடன் பேசி கிருஷ்ணா நதி நீர்ஒப்பந்தம்போட்டிருக்கிறேன். பணிகள் நடந்து கொண்டிருக்கின்றன.

### 2 ஆண்டில் கிருஷ்ணா நீர்

அது வற்றாதநதி. ஆண்டு முழுதும் தண்ணீர்கிடைக்கும். இன்னும் இரண்டு மூன்று ஆண்டுகளில் இத்திட்டம் முடிவடைந்து விடும்.

சென்னை மாநகராட்சியின் ஆண்டு வருமானம் சுமார் 30 கோடி ரூபாய். அதில் அதிகாரிகள் அலுவலர்கள் சம்பளம் 23 கோடிரூபாய் போகிறது. மீதியுள்ள 7 கோடி ரூபாயில் சென்னை நகரத்திற்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து தர வேண்டியிருக்கிறது.

வரி போட்டால் "வரி போடுகிறார்கள் என்பார்கள் இல்லாவிட்டால் மக்களுக்கு வசதி செய்து தரப்படவில்லை என்பார்கள்.

கிராமங்களிலிருந்து மக்கள் நகரத்திற்கு வராமல் தடுக்க வேண்டும் இதை சட்டம்போட்டு தடுக்கமுடியாது அண்ணாசொன்னது போல கிராமங்களில்வசதி செய்து கொடுத்தால் அவர்கள் நகரங்களுக்கு வரமாட்டார்கள் என்று நாங்கள் திட்டங்களை செயல்படுத்தி வருகிறோம்.

எங்கள் கடமையை நாங்கள்மனசாட்சியோடு செய்திருக்கிறோம் என்பதை மக்கள் உணர்வார்கள்

### முதியோருக்கு உதவி

தன்னிறைவு திட்டம், உணவுக்கு வேலைதிட்டம் போன்றவற்றை நிறைவேற்றிய நாங்கள் வீட்டுக்கு ஒருவருக்கு வேலை என்ற திட்டத்தைக் கொண்டு வந்திருக்கிறோம்,

இதன்படி6 லட்சம் பேர் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்கள். வருகிற டிசம்பருக்குள் அவர்களுக்கு வேலை அளிக்கப்படும். இது முன்பே சொன்ன திட்டம் தான்.

"ராமச்சந்திரன் சத்துணவுதிட்டத்தில்சாப்பிடும் குழந்தைகளுக்கு சீருடை என்று சொல்லி தேர்தலில் ஓட்டு வாங்கப் பார்க்கிறான் என்று கருணாநிதி தேர்தல் கமிஷனிடம் சொல்லியிருக்கிறார்.

நான் இதைச் சொல்வதற்கு முன்பேசத்துணவு திட்ட அமைச்சர் சவுந்தரராசன், அன்னை தெரசா சீருடைகொடுத்தநிகழ்ச்சியில்குறிப்பிட்டிருக்கிறார்,

(பலத்த கைதட்டல்)

எப்படிப்பட்ட எதிர்ப்புகள் இருந்தாலும் மக்களுக்கு தேவையான நன்மையை செய்தே திருவோம்.

நாங்கள் ஆட்சிக்கு வரும்போது 50 ஆயிரம் முதியோருக்கு மாதம் 25 ரூபாய் உதவிப் பணம் தரப்பட்டு வந்தது: நாங்கள் இப்போது 1லட்சத்து 99 ஆயிரம் பேர்களுக்கு ஆண்டுக்கு இருமுறை வேட்டி-சேலையும் மாதம் 35 ரூபாய் உதவிப்பணமும் வழங்கி வருகிறோம்.

நாட்டில் 60 வயதுக்கு மேல்உள்ள வயதுமுதிர்ந்த உழைக்க முடியாத அனைவருக்கும் இந்த உதவிப் பணம் வழங்கப்படும். இதுவும் முன்பே உத்தரவு போடப்பட்டது தான். இது மேலும் உயரும்.

80-ம்ஆண்டு நீக்கப்பட்ட பின்புமீண்டும்அதிக இடங்களைத்தந்து எங்களை ஆட்சிக்கு அனுப்பினீர்கள் அண்ணாவின் அரசு உங்கள் கட்சியின் ஆட்சி செய்யும் நல்ல திட்டங்கள் தொடர இரட்டை இலைச்சின்னத்திற்கு வாக்களிக்க வேண்டுகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

---

# மயிலாடுதுறையில் அமைச்சர் யூசுப் தீவிரப் பிரச்சாரம்

**மயிலாடுதுறை, மே. 18. மயிலாடுதுறை தொகுதியில் உள்ள பல்வேறு கிராமப் பகுதிகளில் அமைச்சர் யூசுப் சென்று தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்து கழக வேட்பாளர் தம்பி பாலவேலாயுதத்திற்கு வாக்குகள் கேட்டார்.**

அமைச்சர் யூசுப் மயிலாடுதுறை தொகுதியின் மயிலாடுதுறை ஒன்றியத்திலுள்ள திருமங்கலம், பட்டவர்த்தி, கடக்கம், புத்தகரம், வைத்தியம் பேட்டை, திருவாளப்புத்தூர், வரதம்பட்டு, இளந்தோப்பு, வில்லியநல்லூர், தானஞ்சேரி, கிழாய், அருவாப்பாடி, மேலா நல்லூர் கடுவன்குடி. ஆனை தாண்டவபுரம், மணக்குடி ஆகிய கிராமங்களில் வாக்காளர்களை சந்தித்து ஓட்டு கேட்டார். அங்குள்ள கழகத் தொண்டர்களை சந்தித்து உற்சாகப்படுத்தி தேர்தல் பணிகளில் ஈடுபட்டார்.

அமைச்சர் யூசுப்புடன் சட்டமன்ற உறுப்பினர்கள் என். ஜி விஜயபாலன் ஏ. தங்கராசு மற்றும் கழகத் தோழர்கள் உடன் சென்றார்கள்.

மயிலாடுதுறையில் நடந்த பொதுக்கூட்டத்தில் சட்டமன்ற உறுப்பினர் விஜயபாலன், நன்னிலம் கலையரசன், ஒன்றிய செயலாளர் ராமகிருஷ்ணன் இந்திரா காங்கிரஸ் தங்கராஜ், முன்னாள் சட்டமன்ற உறுப்பினர் எத்திராஜ் மற்றும் கழகக்கூட்டணி தோழர்கள் கலந்து கொண்டனர்.

கூட்டத்தில் அமைச்சர் யூசுப் பேசியதாவது:-

இந்த இடைத் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி. மு. க-வின் வெற்றி நிச்சயிக்கப்பட்ட ஒன்று. இந்த தர்ம யுத்தத்தில் புரட்சித்தலைவரின் பக்கம் நியாயமிருப்பதை மக்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள்.

ஒவ்வொரு அரசியல் வாதிக்கும் ஏற்றத் தாழ்வுகள் சர்வ சாதாரணமாக ஏற்படுவதுண்டு. இங்கு ஆட்சி செய்த காங்கிரஸ் பேரியக்கமும் மிகப் பெரிய வீழ்ச்சியை அடைந்தது. இதுஇங்குமட்டுமல்ல. ஒவ்வொரு நாட்டிலும் அங்குள்ள அரசியல் இயக்கங்கள் ஒரு காலகட்டங்களில் வீழ்ச்சி அடைந்திருக்கின்றன. அப்படி வீழ்ச்சி ஏற்பட்ட காலங்களில் அதிலிருந்து மேலே எழுவதற்கு என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டார்கள் என்பதை பார்க்க வேண்டும்.

ஆனால் இன்று வீழ்ச்சியடைந்து தான்செய்யாத சாதனைகளை புரட்சித் தலைவர் செய்துகொண்டிருக்கிறாரே என்று மனம் புழுங்கிக் கொண்டு உங்களை சுற்றி சுற்றி வருகிற கருணாநிதி மீண்டும் ஆட்சியைப்பிடிப்பதற்கு எவ்வளவு கீழ்த்தரமான முறைகளை கடைப்பிடித்து வருகிறார் என்பதைப் பார்க்க வேண்டும்.

## கருணாநிதியின் விளம்பர வெறி

சாதாரண கடைநிலை அரசியல்வாதிகளைப் போல தன்னுடைய பெயரை மக்கள் மறந்து விடக்கூடாது என்பதற்காக தினமும் செய்தித்தாள்களில் தன்னுடைய பெயர் வரவேண்டுமென்பதற்காக - எவ்வளவு கீழ்த்தரமாக நடந்து கொள்ளுகிறார் என்பது உங்களுக்குத் தெரியும். அவர்பொய்சொல்லட்டும் வேண்டாமென்றுசொல்லவில்லை. பொய்யான குற்றச்சாட்டுக்களை சொல்லி புரட்சித்தலைவரை வம்புக்கு இழுத்துவிட்டு நீதிமன்றம் தன்னுடைய கடமையைச் செய்கிற போது 'என்னைக் கைது செய்து பார்' என்று சவால் விடுவது என்ன நியாயம்? திருச்செந்தூர் கோவில் அதிகாரி சுப்பிரமணிய பிள்ளை இறந்துவிட்டார் அவர் எப்படி இறந்தார் என்று கண்டுபிடிக்க புரட்சித்தலைவர் ஒரு நீதிபதி தலைமையில் ஒரு கமிஷன் நியமித்தார். அந்த கமிஷன் தன்னுடைய முடிவை அரசுக்குத் தெரிவித்தது. அந்த முடிவின் மீது 6 மாதத்திற்குள் அரசு நடவடிக்கை எடுக்கவேண்டும் ஆங்கிலத்தில் இருந்த அந்த முடிவை தமிழ் மொழி பெயர்க்கும் துறையிலிருந்த சதாசிவம்என்ற ஒரு அதிகாரியின் துணையுடன் அரசாங்க இரகசியத்தை வெளியிட்டவர் ஒரு முன்னாள் முதலமைச்சர். அரசாங்க ஆவணத்தை வெளியிடமாட்டேன் என்று உறுதியெடுத்துப் பதவியிலிருந்தவர். பதவியை இழந்த பிறகு, அப்படிச் செய்ததற்கு நீதி மன்றம் சம்மன் அனுப்புகிறது. நீதிமன்றம் சம்மன் அனுப்பாமல்வேறு என்ன அனுப்பும்.

## அச்சம்

சம்மனை வாங்கி முறையாக நீதி மன்றம் சென்றால் நீதி மன்றம் தண்டித்து விடுமென்று அஞ்சி சம்மனை வாங்க மாட்டேன் என்கிறார்.

கம்யூனிஸ்ட்காரர்களுக்கு எப்போதுமே அவசர புத்தி. அவர்கள் எப்போதும் தனக்கு ஒருநியாயம், பிறருக்கு ஒரு நியாயம் என்ற வகைகளில்தான் செயல்படுவார்கள் கேரளாவில் நம்பூதிரிபாட் அவர்கள் டாடாவை அழைத்து விருந்துகொடுத்துவிட்டு 'தொழில் வளம்' பெருகுவதற்காக செய்தோம் என்று சொல்கிறார், அதையே தமிழ் நாட்டில் செய்தால் "முதலாளிகளின் கைக்கூலி என்று கூறுவார்கள்.

முஸ்லிம் லீக்கைப் பொருத்தவரையில், தமிழகத்திலுள்ள இஸ்லாமியர்களை ஏமாற்றுவதாக நினைத்துக் கொண்டு அவர்கள் செய்கின்ற காரியங்களினால் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொள்கிறார்கள். எப்படியாவது மீண்டும் ஆட்சியைப் பிடித்து விட வேண்டும் என்பதற்காக மிகவும் கீழ்த்தரமான முறையில் நடந்து கொண்டிருக்கும் கருணாநிதிக்கு அரசியல் அனுபவம் முதிர்ந்துள்ள மயிலாடுதுறை மக்கள் சரியான பாடம் புகட்டி அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக வேட்பாளர் தம்பி வேலாயுதத்தை வெற்றியடையச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன.

இவ்வாறு அமைச்சர் யூசுப் கூறினார்.

## ஆள்வார்-பேட்டை வியாபாரிகள் சங்கம் ஆதரவு

சென்னை, மே 18— வியாபாரிகளுக்கு மேன்மேலும் சலுகை அளித்து வசதிகள் செய்து வரும் புரட்சித்தலைவர் அரசுக்கு தேர்தலில் ஆதரவு அளித்து வெற்றி பெறச் செய்ய தேனாம்பேட்டை ஆள்வார் பேட்டை வியாபாரிகள் சங்கம் உறுதி எடுத்துள்ளது.

புரட்சித்தலைவர் ஆட்சி தமிழகத்தில் தொடர்ந்து நடைபெறகழக கூட்டணி வேட்பாளர்களை ஆதரித்து ஓட்டளிப்போம் என்றும் சங்கம் சார்பில் உதவி செயலாளர் கே ஜே குமார் ஒரு அறிக்கையில் அறிவித்துள்ளார்.

தேர்தல் நடக்கும் தொகுதிகளில் உள்ள எல்லா வியாபாரிகளும் பொதுமக்களும் கழக கூட்டணி வேட்பாளர்களுக்கு ஓட்டளிக்குமாறு கேட்டுக் கொண்டுள்ளார்.

### கருணாநிதி ஆட்சி காலத்தில்

# தி. மு. க.வினரின் புளுகு: சுலோசனா சம்பத் கடும் கண்டனம்

**சென்னை. மே. 18. கருணாநிதி ஆட்சி காலத்தில் குடிசை மாற்று வாரிய திட்டங்களுக்கு 3 கோடி ரூபாய்க்கு மேல் நிதி ஒதுக்கீடு செய்யாதவர்கள் இன்று குறை கூறுகிறார்கள் என குடிசை மாற்று வாரியத் தலைவா சுலோசனா சம்பத் தெரிவித்துள்ளார்.**

புரட்சித் தலைவர் ஆட்சியில் 49 ஆயிரத்து 450 குடிசை வாசிகள் நன்மை அடைந்துள்ளனர் எனவும் சுலோசனா சம்பத் கூறினார்.

தமிழ்நாடு குடிசை மாற்று வாரியத்தலைவர் சுலோசனாசம்பத் ஒரு அறிக்கை வெளியிட்டுள்ளார்.

அதில் அவர் கூறியிருப்பதாவது:

பொன்மனச் செம்மல் டாக்டர் புரட்சித்தலைவரின் ஆட்சியில்தான் ஏழை எளியமக்களின் வேதனைக் குரல்- விம்மல்- ஆட்சி பீடத்தில் இருந்தோரின் கவனத்தை ஈர்த்தன. அவர்களின் நல்வாழ்வினை உயிரோட்டமாகக் கொண்டு திட்டங்கள் தீட்டி அவைகளை சீரிய முறையில் சிறப்பாக அமுல்படுத்தி ஆர்ப்பாட்டம்- ஆரவாரம் இல்லாமல் தேவைக்கு மேல் விளம்பரப்படுத்தாமல் இன்று பணிபுரிந்து வருவதும் மக்கள் அறிவர்.

தமிழ்நாடு குடிசைப்பகுதி மாற்று வாரியத்தில் இன்றைய வளர்ச்சிவாரியபணிகளில் காணப்படும் சுறுசுறுப்பு நடைமுறையில் அணுகக்கூடிய வகையில் குடிசைவாழ மக்களின் தேவைகளை அடிப்படையாகக் கொண்டு தீட்டப்பட்டு வரும் திட்டங்களில் பெற்று வரும் முழு வெற்றி எதிர் வரிசையினரின் வயிற்றெரிச்சலுக்கு காரணமாகலாம்.

தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியம் மூன்றுவகையான திட்டங்களை தற்போது சென்னை நகரில் செயல்படுத்தி வருகிறது.

குடியிருப்புகள் கட்டும் திட்டம்.

விரைவு படுத்தப்பட்ட மேம்பாட்டு திட்டம்.

உலக வங்கி உதவியின் கீழ் சுற்றுப்புற மேம்பாட்டு திட்டம்.

1970 முதல் 1976 வரை அரசு பீடத்தில் எதேச்சாதிகாரமாக தன் மனம் போன போக்கில் கஜானாவைக் காலி செய்தவர்கள் ஏழு ஆண்டு காலத்தில் கட்டி முடித்த குடியிருப்புகள் 25,000 என்ற இலக்கைக்கூட எட்டவில்லை.

## குடியிருப்பு திட்டம்

சென்னை மாநகரில் ஒரு லட்சத்து அறுபத்து நான்காயிரம் குடிசைவாசிகள் உள்ளதை அன்று கணக்கெடுப்பு செய்தவரும் அவர்தான், அதில் ஏழில் ஒரு பங்கு குடிசைவாசிகளின் பிரச்சினைதான் 1977வரைதீர்ந்தது என்ற அடிப்படையில் ஆராய்ந்தால்- அரசியலில் கயிறு திரித்தவர்கள் - குடிசைவாழ் மக்களின் நலனிலும் விளம்பரத்திற்காக மட்டுமே வாரிய நடவடிக்கைகளை தமக்குச்சாதகமாக்கி இருந்திருக்கிறார்கள் என்பதை புலப்படுத்தும்.

ஏழாண்டுகளில்சென்னை மாநகரில் ஏழில் ஒரு பகுதி குடிசைவாழ் மக்களின் பிரச்சினையைக் கூடத் தீர்க்க முடியவில்லை விளக்கம் கேட்கிறார்கள் இன்றையகொள்கைஅவர்களுக்கு குழப்பமாக இருக்கிறது என்று.

இதில் இன்னொரு வேடிக்கை என்னவென்றால் ஆரம்ப காலத்தில் ஒரு குடியிருப்பு கட்ட ஆன செலவு ரூ. 15,000 தான். அதே அடிப்படையில் ஒரு லட்சத்து 64 ஆயிரம் குடும்பங்களுக்கு குடியிருப்பு கட்டுவதென்றால் தேவைப்படும் நிதி சுமார் 246 கோடி. பின்னர் ஏற்பட்ட விலை ஏற்றத்தைப் பற்றி நாம் பேசவில்லை.

ஆனால் ஆரம்பித்த ஆண்டுகளிலிருந்து 1976 வரை ஆண்டிற்கு குடியிருப்பு திட்டத்திற்கு 3 கோடி ரூபாய்க்கு மேல் நிதி ஒதுக்கீடு செய்யாத அரசால் 246 கோடி செலவழிக்க எத்தனை ஆண்டுகள் ஆகும்? குறைந்தது 80 ஆண்டுகள அல்லவா?

ஏழுஆண்டு. பத்தாண்டு காலத்திலேயேஎல்லோருக்கும் வாரியம் வீடு கட்டிக் கொடுத்து, அடுத்த கட்டத்திற்குப் பணி தொடர ஆலோசித்ததாக எழுதிய ஒரு வாரியத் தலைவராக இருந்தவர் இதனை சிந்திக்கவில்லையா?

அல்லது ஏழு ஆண்டுக்குள் முடித்திட வேண்டும் என்ற உணர்வு உண்மையிலேயே இருந்திருக்குமேயானால், அவர்கள் ஆட்சியில்- அவர்கள் கணக்குப்படி ஒரு லட்சத்து அறுபத்து நான்காயிரம் குடும்பங்களுக்கு குடியிருப்பு கட்ட குறைந்த பட்சம் ஆண்டொன்றுக்கு 40 கோடி ரூபாய் விகிதத்தில் 7-ஆண்டுகளுக்குதொடர்ச்சியாக நிதி ஒதுக்கீடு செய்திருந்தாலொழிய அவர்கள் இலட்சியகுறியீட்டை அடையவே முடியாது.

## முந்தய அரசின் தோல்வி

எனவே, எல்லாக் குடிசைப் பகுதிகளையும் ஏழாண்டுகளில் மாடிக் குடியிருப்புகளாக மாற்றும் முந்தைய அரசின் கொள்கை — லட்சியம் அன்றே தோல்வி அடைந்தது. ஆனால் ஒத்துக் கொள்ள மறுக்கின்றனர்.

3 கோடி ரூபாய்க்கு மேல் நிதி ஒதுக்கிடாத அன்றைய அரசு-ஒதுக்கீடு செய்ய மனமில்லாமல் இருந்த அன்றைய அரசு எல்லோருக்கும் குடியிருப்பு கட்டித் தருவது தான் தனது லட்சியம் என்றும் அதனையும் 10 ஆண்டுகளில் முடித்திருப்போம் என்றும் குடிசை வாழ் மக்களின் நல்வாழ்வில் என்றும் அக்கறை கொண்டதாக வேடம் கட்டிடும் முன்னாள் தலைவரின் கூற்றை என்னவென்பது?

எல்லாக் குடிசைவாழ் மக்களுக்கும் அரசுசார்பில் குடியிருப்புகள் கட்டித் தந்திட திட்டம் வகுப்பது நடைமுறைக்கு ஒத்துவராத கொள்கையாகும் என்பது பொருளாதார நிபுணர்கள் அரசியல்வல்லுனர்கள் மற்றும் நிர்வாகத்திறன் பெற்றோர் அனைவரும் ஒரு மனதாக ஏற்றுக் கொண்ட முடிவாகும்.

திட்டம் 1977-ம்ஆண்டில் ஆரம்பிக்கப்பட்டது. 10 குடும்பங்களுக்கு ஒரு கழிப்பறை, 20குடும்பங்களுக்கு ஒரு குடிநீர்க்குழாய், சாலை வசதி - சாலையில் பொது மின்விளக்கு வசதி போன்ற வசதிகளை- அடிப்படைத்தேவைகளை வழங்குவதே இத்திட்டம்.

1977லிருந்து மார்ச் 84 வரை இத்திட்டத்தின் கீழ் 804 லட்ச ரூபாய் செலவழித்ததன் விளைவாக, குடிசைப் பகுதிகளில் வாழும் 49,450 குடிசை வாசிகள் பயன்பெற்றுள்ளனர்.

## 75000 பேருக்கு நில உரிமை

அரசு, மாநகராட்சி, கோவில் மற்றும் பொது நிறுவனங்களுக்குச் சொந்தமான நிலங்களில் உள்ளகுடிசைப்பகுதிகளில் அடிப்படை வசதிகள் செய்து தந்து, நிலஉரிமை வழங்கி வீடுகள் கட்டிக் கொள்ள கடனுதவியும் குடிசைப்பகுதி மாற்று வாரியம்அளித்துவருகிறது

இவ்வாட்சி வந்த பின்னர் 1981ம் வருடம் இத்திட்டத்தின்மூலம் 75 000 குடும்பங்களுக்கு நில உரிமை வழங்க திட்டமிடப்பட்டு இதுவரை 25,000 குடும்பங்கள் நில உரிமை பெற்றுள்ளனர்.

இப்பணி நிரந்தரமாகத் தொடரும், குடிசைகள் உள்ள தனியார் நிலங்களையும் கையகப்படுத்தி அங்கு வாழும் குடிசை வாழ் மக்களுக்கும் நில உரிமை வழங்கப்படும் திட்டமும் உண்டு.

அதற்கான வழிமுறை நிர்ணயிக்கப்பட்ட உலக வங்கி நிபுணர்கள்-ஆலோசகர்கள் சம்பந்தப்பட்ட இலாக்காக்களால் ஏற்கப்பட்டவையாகும்.

கருணாநிதி ஆட்சிக் காலத்தில் அரும்பாக்கம் வேளச்சேரி, கொரட்டூர் ஆகிய இடங்களில் எதிர் காலத் திட்டங்களாக 500 ஏக்கர் நிலத்தில் போடப்பட்டதாக கூறப்படும் திட்டங்கள் எங்கே?—

## தீவிர முயற்சி

தேடிப் பார்த்தேன், பழைய கோப்புகளை- 'அவர்கள்' கற்பனையிலும் கனவிலும் கழிந்து விட்ட கதையாகத்தான் உள்ளது.

எனவே, "மக்களின் அரசு" நடத்தும் ஆட்சியில் குடிசை வாழ் மக்கள் பட்டா வேண்டுமென்று விரும்பினால் எங்கெங்கு அதனைச் செயல்படுத்த சாத்தியக் கூறுகள் உண்டோ — அங்கெல்லாம் செயல்படுத்த தமிழ் நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியத்தால் எல்லா முயற்சிகளும்மேற்கொள்ளப்பட்டுள்ளன. இதில் என்ன தவறு?

இதில் எங்கேயும் இரட்டைவேடம் இல்லை முன்னவர்களின் விளம்பர ஜாலக்காட்சிகளும் இல்லை.

அண்ணா நகர் இடைத் தேர்தல் அரசியலில் பீதியடைந்துள்ளோர் குழப்புவதற்கு புலம்பல்களை கட்டுரையாக்கி உள்ளனர் குதர்க்கபரிக்கு இக்கட்டுரை தகுந்த விளக்கமாய் அமையும். நாடு அறிய இந்தத் தகவல்கள் உதவட்டும்.

இவ்வாறு சுலோசனா சம்பத் தனது அறிக்கையில் தெரிவித்துள்ளார்.

## கழக அணிக்கு தொழிலாளர் கட்சி ஆதரவு

சென்னை, மே 18— கழக அணிக்கு ஆதரவு தருவதுஎன தொழிலாளர் கட்சி முடிவு எடுத்துள்ளதாக அதன் தலைவர் எம் சிவசண்முகம் அறிவித்துள்ளார்.

தமிழக முதல்வரது சத்துணவு திட்டம் வெற்றி பெறவும், பிரதமரின் 20 அம்ச திட்டம் வெற்றி பெறவும் கழக அணியை ஆதரிப்பது என முடிவு எடுத்துள்ளதாக அறிவித்துள்ளார்.

## கழகத்திற்கு ஸ்தாபன காங்கிரஸ் ஆதரவு

சென்னை, மே. 18— நடைபெற இருக்கும் இடைத்தேர்தலில் கழக அணியை ஆதரிப்பது என தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் அறிவித்துள்ளது.

அதன தலைவர் தளபதி ராமையா இது பற்றி வெளியிட்டு இருக்கும் அறிக்கையில் கூறி இருப்பதாவது:-

சத்துணவு திட்டத்தை செயல்படுத்தி வருவது, காமராஜர் நினைவு இல்லம் அமைத்தது எல்லா முதியவர்கட்கும் உதவிப்பணம் வழங்கியது மதுரைபல்கலைகழகத்திற்கு காமராஜர் பெயரை வைத்தது அவர்பெயரால் ஒரு மாவட்டம் அமைப்பது போன்ற திட்டங்களையும் காமராஜர் தங்கைக்கு உதவிப் பணம் வழங்கி வருவது ஆகிய பணிகளுக்காக கழக அணியை ஆதரிப்பதாக அறிவித்துள்ளார்.

# தி. மு. க. வன்முறை வெறியாட்டத்தில் படுகாயமடைந்த கழகத்தவர்

சென்னை அண்ணா நகர் தொகுதியில் தங்களுக்குத் தோல்வி உறுதி எனத் தெரிந்து கொண்ட கருணாநிதி கட்சியினர் தொகுதி முழுவதும் வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்.

இந்த வன்முறை வெறியாட்டத்தில் 72-வது வட்டம் டி. பி. சத்திரம் எம். ஜி. ஆர். மன்றத் தலைவர் டி. பழனி படுகாய மடைந்தார்.

அதேபோல், 72-வது வட்டத்தில் சோலை என்ற கழகத் தொண்டரும் தி.மு.க. குண்டர்களால் தாக்கப்பட்டார்.

அண்ணா நகர் தொகுதி வாக்காளர்களே

வன்முறையை ஒழித்துக்கட்ட

வாக்களிப்பீர் இரட்டை இலைக்கே

# வன் முறையின்மொத்தஉருவம்-அராஜகத்தின்வாரிசு
# கருணாநிதிக்கு பாடம் புகட்டிடுவீர்

## உப்பிலியாபுரம் - தஞ்சை தொகுதிகளில்

# விடிய 'விடிய செல்வி ஜெயலலிதா எம்.பி. தீவிர பிரச்சாரம்

### மாலை 6 மணிக்கு தொடங்கி காலை 7 மணிவரை கிராமம் கிராமமாக வாக்காளர்களை சந்தித்தார்

## சென்ற இடமெல்லாம் மக்கள் வெள்ளம்

**தஞ்சை, மே 18- உப்பிலியாபுரம், தஞ்சை தொகுதிகளில் ஒரே நாளில் 12 மணி நேரம் இடைவிடாத பிரச்சாரம் செய்து லட்சக்கணக்கான மக்களை சந்தித்து கழக அணியினரை வெற்றி பெறச் செய்யுமாறு கழக கொள்கை பரப்பு செயலாளா செல்வி ஜெயலலிதா எம். பி. வேண்டுகோள் விடுத்தார்.**

செல்வி ஜெயலலிதா எம். பி. சென்ற இடமெல்லாம் மக்கள் அவருக்கு உற்சாக வரவேற்பு அளித்தனர்.

ஒரே நாளில் இரு தொகுதியில் தொடர்ந்து 12 மணி நேரம் இடைவிடாத பிரச்சாரம்செய்து பல லட்சம் மக்களை சந்தித்து கழகஅணி வேட்பாளர்களுக்காக கழக கொள்கைபரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதா எம்பி விடிய விடிய பிரச்சாரம் செய்தார்.

செல்வி ஜெயலலிதா எம். பி. உப்பிலியாபுரம் தொகுதியில் 3 வதுநாளாக நேற்று மாலை 6 மணி முதல் இரவு 9 மணி வரை கழக வேட்பாளர் ஆர். சரோஜாவை ஆதரித்து தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்தார்.

முன்னதாகசெல்வி ஜெயலலிதா எம். பி. மாலை 5 மணி அளவில் திருச்சியிலிருந்து புறப்பட்டு ஆறு மணிக்கு துறையூர் எல்லையை வந்து அடைந்தார். எல்லையில் அமைச்சர்கள் குழந்தைவேலு நாமக்கல் அருணாசலம் மற்றும் கோவைதம்பி எம்.எல்.ஏ. உட்பட கழக மற்றும் தோழமை கட்சியினர் கூடியிருந்து செல்வி ஜெயலலிதா எம். பி.யை வரவேற்றனர். துறையூர் எல்லையிலிருந்து துறையூர் நகரில் செல்வி ஜெயலலிதா எம். பி. சென்ற திருச்சி ரோடு, சக்தி வீரப்பன் கோயில் தெரு, கடைவீதி, ஆத்தூர் ரோடு, மற்றும் துறையூர் நகரிலுள்ள முக்கிய வீதிகள் எங்கும் பல்லாயிரக் கணக்கான ஆண்களும் பெண்களும் பெருந்திரளாக கூடியிருந்து கழக கொள்கை பரப்பு செயலாளரை உற்சாகமாக வரவேற்று தங்கள் வாக்கு இரட்டை இலைக்கே என உற்சாக முழக்கமிட்டனர்.

### உற்சாக வரவேற்பு

துறையூர் நகரில் பல்வேறு இடங்களில் கழக கொள்கை பரப்பு செயலாளர்கழககொடியை ஏற்றிவைத்தார், துறையூர் நகரை அடுத்துசிக்கந்தம்பூர் பாளையத்திற்கு செல்வி ஜெயலலிதா எம். பி. தேர்தல் பிரச்சாரத்திற்கு வந்தார்.

தாரைதப்பட்டைமுழங்க வாணவேடிக்கைகள் மற்றும் அதிர் வேட்டுகள முழங்க கழக கொள்கை பரப்பு செயலாளரை மக்கள் உற்சாகமாக வரவேற்று தங்கள் வாக்கு இரட்டை இலைக்கே என உறுதி கூறினர்.

தொடர்ந்து சிக்கந்தம்பூர், ஒக்கரை, ஆர். புதுப்பட்டி, மாறாடி, புடலாச்சி, வெங்கடாசலபுரம், உப்பிலியாபுரம், சோபனபுரம், ஈச்சம்பட்டி நாகநல்லூர், முருங்கப்பட்டி, பாதர் பேட்டை ஆகிய இடங்களில் பல்லாயிரக்கணக்கான மக்களை சந்தித்து கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதாஎம்பி கழக வேட்பாளர் ஆர். சரோஜாவிற்கு ஆதரவு திரட்டினார்.

செல்வி ஜெயலலிதா எம் பி. வந்த வழி நெடுக பல்லாயிரக் கணக்கான

மக்கள் கூடியிருந்து தங்கள் வாக்கு சத்துணவு தந்த சரித்திர நாயகன் புரட்சித் தலைவரின வேட்பாளர் ஆர்.சரோஜாவிற்கு என உற்சாகமுழக்க மிட்டனர்

உப்பிலியாபுரம் தொகுதியில் அடங்கிய மங்கப்பட்டி என்ற கிராமத்தில் இரவு 9 மணி அளவில் செல்வி ஜெயலலிதா எம்பி தனது உப்பிலியாபுரம் பகுதிக்கான தேர்தல் பிரச்சாரத்தை முடித்தார்.

### தஞ்சை

தஞ்சை தொகுதியில் புரட்சித்தலைவரின் ஆதரவு பெற்று இந்திரா காங்கிரஸ் வேட்பாளராக போட்டியிடும் அய்யாறு வாண்டையாரை ஆதரித்து கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலலிதாஎம்பிநள்ளிரவு 12 மணி அளவில் கூரை மங்கலம் என்ற இடத்திலிருந்து தனது தேர்தல் பிரச்சாரத்தை துவக்கினார். முன்னதாக தஞ்சை தொகுதி எல்லையில் கழக கொள்கை பரப்பு செயலாளரை அமைச்சர்கள்எஸ் டி எஸ், திருநாவுக்கரசு வேட்பாளர் அய்யாறுவாண்டையார்தலைமை நிலையச் செயலாளர் துரை கோவிந்தராசன் மற்றும் கழகம், தோழமைக் கட்சியைச் சேர்ந்த பிரமுகர்கள் வரவேற்றனர்.

பேசுகையில் கூறியதாவது:-

20-ந் தேதி உங்கள் தொகுதியில் நடைபெறவிருக்கும் இடைத் தேர்தலில் புரட்சித் தலைவர் ஆதரவு பெற்ற இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் அய்யாறுவாண்டையாருக்கு உங்கள் வாக்குகளை அளிக்கவேண்டுமென கேட்டுக் கொள்வதற்காக நான் இங்கு வந்து இருக்கிறேன். கருணாநிதி அனல் பிரச்சாரம் செய்ததாக கூறியிருக்கிறார் அவர் செய்தது அனல் பிரச்சாரம் இல்லை. புஸ்வாண பிரச்சாரம் கருணாநிதி இன்னொரு கருத்தனையும் சொல்லியிருக்கிறார்.

அய்யாறு வாண்டையார் பணக்காரராம். அவருடையவேட்பாளர் ஏழையாம். ஒயின்ஷாப் உரிமையாளர் ஏழை என்றால் யாராவது நம்புவார்களா. ஒயின்ஷாப் எப்படி வந்தது. 1967 - க்கு முன் கருணாநிதியின் நிலைமை என்ன?

1967 க்கு பின் அவர் முதலமைச்சராக பொறுப்பேற்று 7½ ஆண்டுகாலம் ஆட்சி நடத்திய பின் இன்றைக்கு அவரது நிலைமை என்ன, பல கோடி ரூபாய்களுக்கு அதிபதியாகி இருக்கிறார். அவருக்கு எப்படி அந்த கோடிகள் வந்ததோ, அது போலதான் தங்களுடைய நாட்டாரும் பணம் சேர்த்து இருக்கிறார்.

கருணாநிதிஇன்னொரு

கிறது சட்டத்தில் ஓட்டை இருக்குமானால் கருணாநிதிபோன்றோர் தப்பித்து கொள்வார்கள் அல்லவா எனவே தான் அந்த சட்டத்தில் ஓட்டை உடைசல்களைசீர்படுத்தி, சட்டம் வடிவமைக்கப்பட்டு சீரான வடிவம் பெற்று விரைவில் அந்த சட்டம் வரும்.

தஞ்சை மாவட்ட மக்களுக்கு மிகப் பெரிய துரோகம் செய்த கருணாநிதி எந்த முகத்துடன் இந்த மக்களை பார்த்து ஓட்டு கேட்க வருகிறார் என்று தெரியவில்லை அவருடைய ஆட்சி காலத்தில்கர்நாடக அரசு காவிரியின் குறுக்கே 3 அணைகளை கட்ட துவங்கியது இதனால் தஞ்சை திருச்சியிலுள்ள விவசாய மக்கள் பாதிப்பிற்குள்ளாயினர். கர்நாடக அரசு அணை கட்டுவதை எதிர்த்து நீதிமன்றத்தில் வழக்கு தொடர்ந்தனர்.

### கருணாநிதியின் போக்கு

தமிழினத் தலைவர் என்று கூறிக்கொள்ளும் கருணாநிதி தமிழக மக்களுக்கு குறிப்பாக தஞ்சை மக்களுக்கு பாதுகாப்பு தந்திருக்க வேண்டாமா? அன்று அவர் என்ன செய்தார் வழக்குகளை வாபஸ்

னர். சத்துணவுதிட்டத்தை 5 ஆண்டு திட்டத்தில் சேர்ப்பதாக மையஅரசு உறுதி கூறியுள்ளது.

பால் கமிஷன் வழக்கில் கோர்ட்டு சம்மனை வாங்காமல் சிறை செல்வேன் என்று கருணாநிதி கூறியுள்ளார்.

### விளம்பர வெறி

சிறைக்கு செல்பவர்கள் எல்லாம் லட்சியவாதிகளா சிறையில் மணிவிழா கொண்டாடுவதை பெருமையாக நினைக்கிறார் கருணாநிதி சிறையில் மணி விழா கொண்டாடி விளம்பரம் தேடலாம் என்றுநினைக்கிறார்

தமிழ்நாடு பஞ்சாப்பாக மாறும் என்று கருணாநிதி கூறியிருக்கிறார். தமிழ் நாட்டில் கருணாநிதி வன்முறையை தூண்டிவிடுவது அனைத்திந்திய அண்ணா தி மு கழகத்திற்கு மட்டுமல்ல, தாய்மார்களுக்கு எதிராக விவசாயிகளுக்கு எதிராக உழைக்கும் மக்களுக்கு எதிராக இதை மனதில்வைத்து தாய்மார்கள் விவசாய பெருங்குடி மக்கள். உழைக்கும் வர்க்கத்தினர் புரட்சித் தலைவரின் ஆதரவுபெற்ற கை சின்னத்திற்கு வாக்கு அளியுங்கள் என்றுகேட்டு கொள்கிறேன் 4 தொகுதிகளிலும்கழகஅணிவெற்றி பெறுவது உறுதி இதை நான் மக்களை சந்தித்து மக்களின் மனரேகையை பார்த்து கூறுகிறேன.

இவ்வாறு செல்வி ஜெயலலிதா எம் பி பேசினார்.

## தஞ்சை மக்களுக்கு கருணாநிதியின் துரோகம்

வேட்பாளர் அய்யாறு வாண்டையாரை அமைச்சர் எஸ். டி.எஸ். செல்வி ஜெயலலிதா எம். பிக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

தஞ்சை தொகுதியில் நள்ளிரவு 12 மணி அளவில் பூனமங்கலம் என்ற இடத்திலிருந்து தனது தேர்தல் பிரச்சாரத்தைக் துவங்கிய செல்வி ஜெயலலிதா எம். பி. தஞ்சை தொகுதியில் அடங்கிய இச்சானி. கள்ள பெரம்பூர் தென்னங்குடி, பிள்ளையார் நத்தம், களிமேடு, ரெட்டி பாளையம், ஜெபமாலைபுரம், கீழ அலங்கம், ஆகிய இடங்களில் தேர்தல் பிரச்சாரம் செய்து விட்டு அதிகாலை 3 மணி அளவில் கீழ அலங்கத்தில் நடைபெற்ற பிரமாண்டமான தேர்தல பிரச்சார கூட்டத்தில் செல்விஜெயலலிதா எம்பி பேசினார்.

### பிரமாண்ட கூட்டம்

கீழ அலங்க கூட்டத்தை முடித்துவிட்டு தொடர்ந்து கழக கொள்கை பரப்பு செயலாளர் தேர்தல் பிரச்சாரத்தில் ஈடுபட்டார், காலை 6மணி அளவில் தென் பெரம்பூர் என்ற இடத்தில் தனது தேர்தல் பிரச்சாரத்தை செல்விஜெயலலிதாஎம் பி முடித்தார்.

கீழ அலங்கத்தில் நடைபெற்ற பிரம்மாண்டமான தேர்தல் பிரச்சாரகூட்டத்தில் செல்வி ஜெயலலிதா எம் பி. கலந்து கொண்டு

பெரிய கேள்வியும் கேட்டு இருக்கிறார் எம்.ஜி.ஆர். இந்திரா காங்கிரசுடன் கூட்டு வைத்துக் கொள்ளுவது முறையானதாஎன்று கேட்டு இருக்கிறார்.

மத்தியில் இந்திரா காங்கிரஸ் ஆளும் கட்சி தமிழகத்தில் கழகம் ஆளும் கட்சி, தமிழகத்தில் செயல்படுத்தப்படும் நல்ல திட்டங்களுக்கு மைய அரசு உதவி வருகிறது.

ராமேஸ்வரம் பகுதியில் கடலில் மீன் பிடிக்க செல்லும் மீனவர்கள் இலங்கை கடற்படையினரின் தொல்லைகளுக்கு ஆளானார்கள் ஏழைமீனவர்கள் வலைகள் நாசப்படுத்தப்பட்டு சேதமும் ஏற்படுத்தப்பட்டது மீனவர்களுக்கு பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று முதல்வர் புரட்சித் தலைவர் மைய அரசை கேட்டுக் கொண்டார்,

அதன் விளைவாக இந்திய கப்பல் படை கப்பல் ஒன்று இலங்கை இந்தியா எல்லைஓரம் பகுதியில் மீன்பிடிக்கும் இந்திய மீனவர்களின் பாதுகாப்பிற்கு செல்லும் என்று மத்தியபாதுகாப்புஅமைச்சர் ஆர். வெங்கட்ராமன அறிவித்திருக்கிறார்.

கருணாநிதி, பினாமி நில ஒழிப்புச் சட்டத்தை கொண்டு வராத இந்திரா காங்கிரசுடன் எம், ஜி ஆர் கூட்டு சேரலாமா என்கிறார்பினாமி நில ஒழிப்புசட்டத்திற்குமைய அரசு அனுமதி தர முடியாது என்று கூறவில்லை அந்த சட்டத்திலிருக்கும் ஓட்டை, உடைசல்களை பரிசீலித்துக் கொண்டிருக்

பெறச் செய்தார்.

கருணாநிதிக்கு விவசாயிகள் பற்றி பேசஎன்ன யோக்கியதை இருக்கிறது கருணாநிதி ஆட்சி காலத்தில் மக்கள் அரிசிக்காக வீதி, வீதியாக அலைந்தனர் அன்று நல்ல விளைச்சல் இருந்தும் லஞ்சம் வாங்கிக் கொண்டு கருணாநிதி பஞ்சத்தை உருவாக்கினார்.

5 கோடி ரூபாய் வேரா வியாபாரிகளிடம் பெற்றுக் கொண்டு நெல் கடத்த அனுமதித்தனர். ஆனால் புரட்சித்தலைவர் ஆட்சியில் வறட்சி அதைத் தொடர்ந்து வெள்ளம் ஏற்பட்ட போதும் அரிசிக்கு தட்டுப்பாடு என்ற நிலை இல்லாது வெளி மாநிலங்களிலிருந்து அதிக விலைக்கு அரிசி வாங்கி வந்துநியாய விலைக்கடைகளில் குறைவான விலைக்கு புரட்சித் தலைவர் அரிசி வழங்கினார்.

இதன் மூலம் ஏற்பட்ட பல கோடி ரூபாய் இழப்பை மக்கள் நன்மை கருதி புரட்சித் தலைவர் அரசு நஷ்டத்தைபொருட்படுத்தாது செய்தது. ஆந்திராவில் என். டி. ராமாராவ் முட்டை. ரொட்டி, பால் கொடுப்பதாக கூறினார். ஆனால் இன்று முட்டை வழங்கப்படவில்லை வெறும் ரொட்டியும், பாலும் தான் வழங்கப்படுகிறது தமிழ் நாட்டில் வழங்கப்படுவது சத்துணவா என்றுகருணாநிதி கேட்கிறார்

கீரை சத்துணவு என்று ஆங்கில தமிழ் மருத்துவர்கள் ஒப்புக்கொண்டுள்ள

## தஞ்சையை உலுக்கிய கழக அணியின் மாபெரும் பேரணி

தஞ்சை, மே. 18— தஞ்சையில் கழக அணி ஆதரவு வேட்பாளர் அய்யாறு வாண்டையாரை ஆதரித்து மாபெரும் பேரணி இன்று காலை தஞ்சையில் நடைபெற்றது. அமைச்சர் எஸ். டி. எஸ். தலைமையில் அமைச்சர் திருநாவுக்கரசு முன்னிலையில் நடந்த இந்த பேரணியை கருப்பையா மூப்பனார் துவக்கிவைத்தார். பல்லாயிரக் கணக்கான கழக தோழர்களும் தோழமை கட்சியினரும் இந்த பேரணியில் கலந்துகொண்டனர்.

இந்திரா காங்கிரஸ் வேட்பாளர் அய்யாறு வாண்டையாரின் வெற்றியை உறுதிப்படுத்தும் வகையில் இந்தப் பேரணி அமைந்திருந்தது.

பேரணி சென்ற வழியெங்கும் சாலையின் இருபுறமும் ஏராளமான மக்கள் கூடியிருந்து "கை" சின்னத்திற்கே எங்கள் வாக்கு என உறுதி கூறினர்.

உப்பிலியாபுரத்தில்

## கழகத்திற்கு ஆதரவாக தி. க. வினர் பிரச்சாரம்

திருச்சி, மே 18— உப்பிலியாபுரம் தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் சரோஜாவிற்கு ஆதரவாக திராவிடர் கழக தோழர்கள் பிரச்சாரம் செய்து வருகின்றனர்.

திட்டக்குடியிலிருந்து தி.க. தோழர்கள் டி. ஆர். சுந்தரம் தலைமையில் சென்றுதேர்தல்பிரச்சாரம் செய்தனர்.

## வட ஆற்காடு மாணவர்பிரிவு பிரச்சாரம்

வட ஆற்காடு மாவட்ட கழக மாணவர் பிரிவு சார்பில் கடந்த 11ந் தேதி உப்பிலியாபுரம் தொகுதியிலும் 15-ந் தேதியிலிருந்து அண்ணாநகர் தொகுதியிலும் கழக வேட்பாளரை ஆதரித்து தேர்தல் பிரசாரம் செய்யப்படுகிறது. இந்த பிரிவில் கே. எம். மனோகரன், ஆர். சீனிவாசன், டி. எம். அன்வர் கலீல் பி. ஏ. ரஹ்மான், ஜி ஏகநாதன், ராமதாஸ் ஏ. முத்து, எம். சார்லஸ் ஆகியோர்இடம்பெற்றுள்ளனர்.

## அண்ணாநகர் தொகுதியை அடியோடு புறக்கணித்த கருணாநிதியா

# கிருஷ்ணா நதி நீர் திட்டம்பற்றி பேசுவது?

## முதல்வர் புரட்சித்தலைவர் கேள்வி

### கிருஷ்ணா நதி நீர் திட்டப்பணிகள் தீவிரமாக நடந்து வருகிறது

**சென்னை, மே. 18. அண்ணாநகர் தொகுதியையே திரும்பி பார்க்காமல் புறக்கணித்த கருணாநிதி தான் கிருஷ்ணா நதி நீர் திட்டம்பற்றி பேசுகிறார். கிருஷ்ணா நதி நீர் திட்டப்பணி தீவிரமாக நடைபெற்று வருகிறது நாள் தோறும் சுமார் ஆயிரம் தொழிலாளர்கள் பணியாற்றி வருகிறார்கள் என முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.**

சென்னை அண்ணாநகர் தொகுதியில், தன்னை வரவேற்க கூடியிருந்தஆயிரக்கணக்கானவர்களிடையே முதல்வர் புரட்சித் தலைவர் பேசுகையில் கூறியதாவது:-

அண்ணாநகர் தொகுதியின் உறுப்பினராக இருந்த கருணாநிதி தொகுதியை பற்றியே கவலைப்படவில்லை.

அப்படிப்பட்ட கருணாநிதி தான் இன்று கிருஷ்ணா நதிநீர் திட்டம்பற்றி குறைகூறுகிறார்.

கிருஷ்ணா நதிநீர் திட்டப்பணிகள் தீவிரமாக நடைபெற்று வருகிறது.

நாள்தோறும் ஆயிரத்திற்கும் மேற்பட்டதொழிலாளர்கள இத்திட்டத்தில் பணியாற்றிவருகிறார்கள்,

தமிழக பகுதியில் 24 கிலோமீட்டர் தூரத்திற்கான கால்வாய்பணியில் 14 கிலோ மீட்டர் பகுதியில் திட்டப்பணிகள் நடைபெற்று வருகிறது. இந்தப்பணியில் எந்திரங்

களும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

கிருஷ்ணாநதிநீர் திட்டப்பணிகள் குறிப்பிட்டபடி முடியும்.

கருணாநிதி ஆட்சி காலத்தில் வறட்சி ஏற்பட்ட போது கஞ்சித தொட்டி திறந்து மக்களுக்கு உதவினேன்.

இப்பொழுது அதிக விலை கொடுத்து அரிசி வாங்கி மலிவு விலையில் மக்களுக்கு அளித்து வருகிறோம

எங்கள் கடமையை நாங்கள் செய்கிறோம் அதனால்உரிமையோடு உங்களை சந்திக்கிறோம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

உங்கள் வாக்கு யாருக்கு என முதல்வர் புரட்சித் தலைவர் வினவிய போது கூடியிருந்தவர்கள் எங்கள் வாக்கு இரட்டை இலைக்கே என முழக்கமிட்டனர்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் குண்டர்களால் தாக்கப்பட்டு நாகை மருத்துவமனையில சிகிச்சை பெறும் கழகத் தோழர் கவிஞர் அ. சி. மணியனை, கலையரசன் எம். எல். ஏ, சு. தென்னரசு காவன், அ. பெ. பால்ராஜ். துரை ராஜேந்திரன் ஆகியோர் சந்தித்து ஆறுதல் கூறினர்,

புரட்சித்தலைவர் அறிவிப்பு: பஸ் விபத்தில் இறந்த

# கழகத்தோழர் குடும்பத்திற்கு ரூ. 25 ஆயிரம் அளிப்பு

## காயமடைந்தோருக்கு தலா ரூ. 5 ஆயிரம் வீதம் அளிக்கப்படுகிறது

சென்னை, மே. 18- சென்னை நுங்கம்பாக்கத்தில் ஏற்பட்ட பஸ் விபத்தில்இறந்த கழகத் தோழர் சகாயராஜ் குடும்பத்திற்கு ரூ. 25 ஆயிரமும், காயமடைந்தவர்களுக்கு தலா ரூ 5 ஆயிரம் வீதமும் அளிக்கப்படும் எனவும் முதல்வர் புரட்சித் தலைவர் அறிவித்தார்.

சென்னை அண்ணா நகர் தொகுதியில், ஜெய லட்சுமிபுரத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் இன்று காலை தேர்தல பிரசாரத்தைத் தொடங்கினார்.

ஏராளமானவர்கள் காலை முதலே புரட்சித் தலைவரின் வருகைக்காக காத்திருந்தனர்.

அண்ணாநகர் தொகுதி நுங்கம்பாக்கத்தில் கழக தேர்தல் அலுவலகத்தில் பணியாற்றிய கழகத் தோழர் சகாயராஜ் பஸ் விபத்தில் இறந்தது தெரிந்ததே.

அவரோடு தேர்தல்அலுவலகத்தில் இருந்த கழகத் தோழர்கள் முருகேசன், இன்பராஜன், ஆரோக்கியராஜ், மகேஷ், ரவி, ஆகிய 5 பேர் காயமடைந்தனர்.

இந்த விபத்தில் இறந்துபோன சகாயராஜ் குடும்பத்திற்கு25ஆயிரம் ரூபாய் வழங்கப்படும்எனமுதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

விபத்தில் காயமடைந்தவர்களுக்கு தலா ரூ.5 ஆயிரம் வழங்கப்படும் எனவும் முதல்வர்புரட்சித் தலைவர் அறிவித்தார்.

காயமடைந்தவர்கள் ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்று வருகிறார்கள்.



சென்னை அண்ணாநகர் தொகுதியில், முதல்வர் புரட்சித்தலைவர் வாக்காளர்களைச் சந்தித்தார்.



சென்னை அண்ணா நகர் தொகுதியில் அமைச்சர் கே. ஏ. கே. மற்றும் கழக முன்னணியினர் வேட்பாளர் ராதாகிருஷ்ணனுடன் சென்று தேர்தல் பிரச்சாரம் செயதனர்.

## மக்கள் ஆதரவு புரட்சித்-தலைவருக்கே

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சேர்ந்த கூட்டத்தைப் பார்தததும் கிலி பிடித்த நிலைக்காளாகிஉள்ளனர்

அண்ணா நகரில் மாலை 4மணிவரை எங்கு திரும்பினாலும் புரட்சித்தலைவர் உலா- மக்கள் எழுச்சி எதிரொலித்த வண்ணம் இருந்தது.

உப்பிலியாபுரம், மயிலாடுதுறை தொகுதிகளிலும் இன்று மாலை 4 மணி வரை தீவிர பிரசாரம் நடந்தது.

இந்த இரு தொகுதிகளிலும் இன்று மாபெரும் சைக்கிள்பேரணி நடந்தது தஞ்சையிலும்பேரணிநடந்தது.

கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலிதா எம். பி. இன்று பிற்பகலில் இருந்துமாலை 4 மணி வரை சூறாவளி பிரச்சாரம் செய்தார்.

நேற்றும் தஞ்சையில் செல்விஜெயலலிதாஎம்.பி தீவிர தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட்டார்.

மயிலாடுதுறை, உப்பிலியாபுரத்திலும் அதற்கு முன்பு மின்னல் வேக பிரச்சாரம் செய்து திமுக வினரைகலகலக்க வைத்தார்

4 தொகுதிகளிலும் முதல்வர் புரட்சித்தலைவர் செய்தசூறாவளிபிரசாரம், கழக கொள்கை பரப்பு செயலாளர் செல்வி ஜெயலிதா எம்பி மின்னல் வேக பிரசாரம் அமைச்சர் பெருமக்கள் கழகத் தலைவர்கள் தொண்டர்கள கண்துஞ்சாது பம்பரமென சுழன்று செய்த தேர்தல்பணி 4 தொகுதிகளிலும் கழகமே வெற்றி என்று உறுதிகூறும் வகையில் இருந்தது.

கழகத்தினரோடு இந்தரா காங்கிரஸ் மற்றும் தோழமை கட்சியினரும் தீவிர பிரசாரத்தில் இன்று ஈடுபட்டனர்.

## யாருக்கு உங்கள் ஓட்டு?

அரிசிப் பற்றாக்குறையால்
மக்கள் அல்லல்பட்டபோது
நாட்டு மக்களின்
வாட்டத்தைப் போக்க

உண்ணாவிரதமிருந்தவர்
தமிழக முதல்வர்
புரட்சித்தலைவர்!

'அரிசிப் பற்றாக்குறைக்கே
அரசுதான் காரணம்;
சத்துணவு திட்டத்தாலேதான்
பற்றாக்குறையே வந்தது'
என்று கூறி

தமிழக மக்களைப்
பட்டினி போடவைக்க
சதி செய்த
தி.மு.க. கும்பலுக்கா?

மத்திய அரசு
தமிழகத்திற்கு அரிசி தர
பாஷை தெரியாத
காஷ்மீர எம்.பி.க்களும்
கையெழுத்துப்போட்டனர்
ஆனால்...

தமிழினக் காவலர்கள் என்று
தம்பட்டமடித்துக்கொண்டு
கையெழுத்துப் போட
மறுத்தவர்கள் தி.மு.க.வினர்!

வாக்காளப்
பெருமக்களே



யாருக்கு
உங்கள் ஓட்டு?

தமிழ்நாட்டிலிருந்த
14 ஆலைகளுக்கு
மூடுவிழா செய்துவிட்டு
கோட்டையை விட்டு
வீட்டுக்குப் போனவர்

## தொழிலாளர்களின் விரோதி கருணாநிதி!

மூடப்பட்ட ஆலைகளில்
10 ஆலைகளைத் திறந்து
வேலை இழந்து
வீதியில் அலைந்த
தொழிலாளர்கட்கு
வேலை தந்து
விழிநீர் துடைத்தவர்

## தொழிலாளர்களின் காவல் தெய்வம் புரட்சித்தலைவர்!



தொழிலாள
வர்க்கமே
யாருக்கு
உங்கள் வாக்கு

காருக்குவழிவிடவில்லைஎன்றுகூறிவம்புக்குஇழுத்து

# குடிநீர் வடிகால் வாரிய பொறியாளரை அடித்த தி. மு. க. எம். பி.க்கள்

## ரூபாய் நோட்டுகளுடன் டைரியையும் பிடுங்கிக் கொண்டு துரத்திய கொடுமை

திருச்சி, மே. 18- தங்களுடைய காருக்கு ஏன் வழிவிடவில்லை என்று கூறி சாலையில் நிறுத்தப்பட்டிருந்த குடிநீர் வடிகால் வாரிய ஜீப்பின் டிரைவரை தி. மு. க. எம். பிக்கள் அடித்தனர் பின்னர் பொறியாளரையும் அந்த எம் பிக்கள் அடித்து உதைத்தனர். அவரிடம் இருந்த டைரி மற்றும் ரூபாய் நோட்டுகளையும் தி.மு.க. வினர் அபகரித்துக் கொண்டு விரட்டினர் இது குறித்து போலீசில் புகார் செய்யப்பட்டுள்ளது.

திருச்சி மாவட்டம் மணப்பாறை, துறையூர் பகுதிகளில் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ள இந்த சம்பவம் குறித்த விபரமாவது:-

மணப்பாறை டிவிஷன் குடிநீர் வடிகால் வாரிய உதவி நிர்வாகப் பொறியாளராக வேலைபார்த்து வருபவர் சண்முகம், துறையூர் பகுதியில் அவர் கடந்த 15-ம்தேதி முகாமிட்டு குடிநீர் வடிகால் வாரிய வேலைகளை கவனித்துவந்தார்.

ஒட்டாம்பட்டியில் கைபம்பு ஒன்று வேலை செய்யாததால் அதை பார்வையிட அவர் அங்கு சென்றிருக்கிறார், சாலை ஓரம் ஜீப்பை நிறுத்திவிட்டு கைபம்பை பார்வையிட்டுக்கொண்டிருந்தார்.

அப்போது அங்கே காரில் வந்த திமுக எம்.பி.க்கள் அர்ஜுனன் மற்றும் எஸ். செல்வராஜ் ஆகியோர் குடிநீர் வடிகால் வாரிய ஜீப்பின்டிரைவரைகடுமையாக தாக்கிப் பேசினார்களாம் டிரைவரை வம்புக்கிழுத்துஅவரைஅடித்தார்களாம், உதவிப் பொறியாளர் சண்முகத்தையும் அந்த திமுக எம்பிக்கள் தாக்கியதாக புகார் செய்யப்பட்டுள்ளது. எம்பிக்கள் அர்ஜுனனும், செல்வராஜும் உதவி நிர்வாக பொறியாளரை மோசமான வார்த்தைகளை சொல்லிக் கேவலமாகதிட்டிஇருக்கிறார்கள

### டைரி பறிப்பு

எம்பிக்களுடன் சில திமுகவினரும் இருந்திருக்கிறார்கள். ராஜா நாயுடு (தி மு க) பொறியாளரின் டைரியை பறித்துக் கொண்டாராம்.

அந்த டைரியில் முக்கிய அலுவலக குறிப்புகள் மற்றும் ரூபாய் நோட்டுகளும் வைக்கப் பட்டிருந்ததாக புகாரில் கூறப்பட்டுள்ளது

துறையூர் போலீஸ் ஸ்டேஷனில் உதவி நிர்வாகப் பொறியாளர் சண்முகம் புகார் கொடுத்துள்ளார்.

தன்னுடைய புகார் மனுவில் அவர் இந்த விவரங்களை குறிப்பிட்டுள்ளார்.

துறையூர் போலீசார் தி.மு.க எம். பி.க்கள் அர்ஜுனன் என் செல்வராஜ் மற்றும் 100பேர்மீது வழக்கு ஒன்றை பதிவு செய்துள்ளனர். இந்திய குற்றவியல் சட்டம் 322 மற்றும் 379 ஆகியவற்றின் கீழ் இந்த வழக்கு பதிவு செய்யப்பட்டுள்ளது. மேற்கொண்டு போலீசார் இது குறித்து விசாரணை செய்து வருகிறார்கள்.

## மண்ணடி தோழர்கள் பிரச்சாரம்

சென்னை, மே 18— துறைமுகத் தொகுதி அவைத்தலைவர் மண்ணடி கிருஷ்ணமூர்த்தி தலைமையில் எம். எஸ். மணி என். ஏ. துரை, எஸ்.எஸ். ராஜேந்திரன், எல். குமார் எஸ் மனோகரன், ஆட்டோ ஆனந்தன், ஜீவானந்தம், பன்னீர்செல்வம், தோடி கணேசன், அஞ்சுதலட்சுமி, எஸ் ஆர். அண்ணாதுரை, ஏ. பெருமாள் பொன்னுசாமிமுத்துமற்றும் கழகத் தோழர்கள் அண்ணா நகர் தொகுதியில் பிரசாரம் செய்தனர்.

77 வது வட்டத்தில் வீடு வீடாகச் சென்று அவர்கள் ஒட்டு கேட்டனர்



அன்னை தமிழுக்கு பல்கலைக்கழகம்
கண்ட பைந்தமிழ் காவலர் சின்னம்



பாடுபட்டு பெற்ற சுதந்திரத்தை
பாதுகாக்க –
மத்தியில் **இந்திரா காந்தி**யின்
தலைமை வேண்டும்!

தமிழ் காக்க – தமிழர் நலம் காக்க
தந்தை பெரியார் – அண்ணா
வழி வந்த....





டாக்டர்
**புரட்சித்தலைவரின்**
தலைமை
தமிழகத்திற்கு வேண்டும்!





மக்களின் நம்பிக்கையைப் பெற்ற
சின்னங்களை மறவாதீர்!

FOTOCOMM

அனைத்துலக எம்.ஜி.ஆர். மன்றம். சென்னை-600 014.